# வெள்ளிவிழா மலர்

(வெள்ளி விழா 7 - 2 - 04, 8 - 2 - 04)





## கம்பன் கழகம்

201, பிள்ளையார் கோயில் தெரு, வாழியூர்

தி.மலை.மாவட்டம்

# வெள்ளிவிழா மலர்

(வெள்ளி விழா 7 - 2 - 04, 8 - 2 - 04)



## மலர் ஆக்கம்

வாழியூர் **வே. இராசவேலன்,** *க.மு., கல்.மு.,*
செயலாளர், வாழியூர் கம்பன் கழகம்.

**வே.இரா. சிவஞானவள்ளல்**
வேலூர்.

**வி.சி.தினகரன்** *க.இ., ச.இ.,*
வழக்கறிஞர், வாழியூர்.

**கம்பன் கழகம்**
**201, பிள்ளையார் கோயில் தெரு**
**வாழியூர்**
**(வழி) ஒன்னுபுரம் - 632 315**
**தி.மலை. மாவட்டம், தொ.பே 04173 - 243724**

## வாழியூர் கம்பன் கழகத்தின் செயல் மறவர்கள்

தமிழ்த் திருவாளர்கள் :-

- **வாழியூர் வே.இராசவேலன்** க.மு., கல்.மு.,
  செயலாளர், கம்பன் கழகம்
- **மா.சானகிராமன்** சு.தாங்கல்
  பொருளாளர், கம்பன் கழகம்
- **அ.நடராசன்** இராசநகர்
- **வே.ச. ஞானப்பிரகாசம்** வேகாமங்கலம்
- **ஆ.குருசாமி** அத்திமூர்
- **நா. எத்திராசு** வாழியூர்
- **இராச. கோவிந்தராசு** க.மு., கல்.மு., அ.கோ.படவேடு.
- **தேவ. மாணிக்கவேலன்** க.மு., கல்.இ., காளசமுத்திரம்
- **க.சிற்றரசு** க.மு., கல்.மு., ஒடுக்கத்தூர்
- **த.சுப்பிரமணியன்** வாழியூர்
- **கு.அன்பழகன்** அறி.மு., கல்.இ., மொ.மு., சந்தவாசல்
- **மா.கணேசன்** அத்திமூர்
- **த.காண்டீபன்** வாழியூர்
- **மு. சரவணன்** வாழியூர்
- **சு.கிருட்டிணமூர்த்தி** கண்ணமங்கலம்
- **ஆ.சங்கர்** வாழியூர்
- **பொ. இரமேசு** அத்திமூர்
- **தா.சு.சரவணன்** சு.தாங்கல்
- **தீ. இரவி** க.இ., மங்களாபுரம்
- **[illegible]மாதவன்** [illegible]புத்தூர்
- **[illegible] குமரன்** க.மு., வாழியூர்
- **[illegible]** சு.தாங்கல்
- **[illegible]** சு.தாங்கல்
- **இராச. [illegible]** அறி.இ., (கணினி) வாழியூர்
- **[illegible] இராசவேலன்** வாழியூர்

## எங்களூர்

எங்களூர் வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர். படவேடு என்ற இடத்தில் சம்புவராய மன்னர்கள் கோட்டை கட்டி அரசாண்டனர். அக்கோட்டைக்கு வழியாக எங்களூர் இருந்ததாம் ! வழியூர் என்பது மருவி வாழியூர் என்று ஆயிற்றாம்.

சம்புவராயரின் குலதெய்வம் எக்லாதேவி. அந்த அம்மன் எங்களூரில் கோயில் கொண்டிருந்தாள். ஆகவே எங்களூருக்கு எக்லாவரம் என்ற பெயரும் உண்டு.

எங்களூருக்குப் பக்கத்தில் சுமார் 3 கி.மீ தூரத்தில் படவேடு இருக்கிறது. இங்கு இரேணுகாதேவி, ஈஸ்வரன், யோக இராமர், முருகன் ஆலயங்கள் உண்டு. கோட்டைமலை என்ற மலையின் மீது வேணுகோபாலசுவாமி கோயில் உள்ளது. அம்மலை மீது ஏறி இறைவனை வணங்கும் போது திருப்பதி மலைமீது இருக்கும் படியான உணர்வு ஏற்படும்.

எங்களூருக்கு அருகில் சுமார் 1 கி.மீ தூரத்தில் கணேசபுரம் என்ற ஊரில் விநாயகர் கோயில் உள்ளது. அங்கு உள்ள மிகப்பெரிய விநாயகர் சிலை உள்ளது. அது கைலாய விநாயகர் என்று அழைக்கப்படுகிறது.

| | | |
|---|---|---|
| எங்களூரின் மொத்தப் பரப்பு | : | 251 ஹெக் 41.5 ஹேர் |
| குடியிருப்பு பகுதி மட்டும் | : | 6 ஹெக் 71.5 ஹேர் |
| வீடுகள் | : | 436 |
| மக்கள் தொகை | : | 2571 |
| மாவட்டம் | : | திருவண்ணாமலை |
| வட்டம் | : | போளூர் |
| நாடாளுமன்ற தொகுதி | : | வந்தவாசி |
| சட்டமன்ற தொகுதி | : | போளூர் |
| ஒன்றியம் | : | போளூர் |

## எங்களூருக்கு வந்து செல்லும் பேருந்துகள்

### வேலூரிலிருந்து கண்ணமங்கலம் வழியாக வாழியூருக்குப் பேருந்து நேரங்கள்

தடம் எண் 22, 24 அரசு நகரப் பேருந்து

| | |
|---|---|
| முற்பகல் | 5.55, 8.10, 9.25, 10.40, 12.00 |
| பிற்பகல் | 1.10, 2.40, 3.40, 6.00, 7.15, 9.10, 9.50 |

கண்ணமங்கலத்திலிருந்து வாழியூருக்குச் சிற்றுந்து

| | எஸ்.முருகன் சிற்றுந்து | பாபு சிற்றுந்து |
|---|---|---|
| முற்பகல் | 9.10, 12.00 | 9.30, 11.30 |
| பிற்பகல் | 2.00, 4.50, 6.45 | 1.30, 3.30, 5.30, 7.30 |

ஸ்ரீ ரேணுகாம்பாள் பேருந்து

| | செய்யாரிலிருந்து | ஆரணியிலிருந்து |
|---|---|---|
| முற்பகல் | 10.45 | 11.50 |
| பிற்பகல் | 2.45 | 3.50 |

ஆரணியிலிருந்து தடம் எண் 22 அரசுப் பேருந்து

முற்பகல் 6.00 பிற்பகல் 3.30

எங்களூரிலிருந்து கண்ணமங்கலம் 9 கி.மீ,
வேலூர் 29 கி.மீ, போளூர் 29 கி.மீ, ஆரணி 20 கி.மீ,
திருவண்ணாமலை 50 கி.மீ

**கயிலைமாமுனிவர் வித்துவான்**
**சாந்தலிங்க இராமசாமியடிகள்**
பேரூராதீனம், பேரூர் (அஞ்சல்)
கோயமுத்தூர் - 641 010, தமிழ்நாடு

## வாழ்த்து

தழல்புரைநிறக் கடவுள் தந்த நற்றமிழ் போற்றும் கம்பன் இலக்கியம் செய்பொருள் வாய்க்க உறுதுணைபுரிவது நட்பும் உறவும் வளர வழிகாட்டுவன. 25வது ஆண்டு கம்பன் கழக வெள்ளிவிழாச் சிறப்பாக நடைபெறவும் மக்களிடையே அறநெறியும் தமிழ் மரபும் தழைக்கவும் பின்தங்கிய மக்களிடையே இலக்கிய உணர்வு பெருகத் தொண்டாற்றவும் வாழ்த்துகின்றோம்.

என்றுமுள செந்தமிழின் ஏற்றங் கண்டு
நன்மைமிகு அறநெறிகள் நயந்து பேணி
புன்மையகற்றிடும் கம்பன் புனிதத் தொண்டின்
தன்மையுணர் வெள்ளி விழாத் தழைத்து வாழி

வேண்டுந்தங்களன்பு,
அன்புள்ள
**தவத்திரு சாந்தலிங்க இராமசாமியடிகளார்**
பேரூராதீனம்

புனித மிக்க

ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக

பரமாச்சாரிய சுவாமிகள்

ஆதீனகர்த்தர், மதுரை ஆதீனம்

70, தெற்காவணி மூல வீதி

மதுரை –625 001

## வாழ்த்து

ஆசீர்வாதம்

தங்கள் அன்புமிகு 13 – 11 – 2003 ஆம் நாளிட்ட மடல் கிடைத்தது, வாழியூர் கம்பன் கழகம் வெள்ளி விழாக் கொண்டாட இருப்பதையும், அவ்விழாவை நினைவு கூறும் வகையில் சிறப்பு மலர் வெளியிடத் தீர்மானித்திருப்பதையும் அறிந்து மகிழ்கின்றோம். மலர் எல்லா வகைகளிலும் சிறந்திடவும், தங்களின் சமய, சமுதாயப் பணிகள் மென்மேலும் வளர்ந்தோங்கிடவும் திருவருளைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கின்றோம்.

எல்லோர்க்கும் ஆசீர்வாதம்

**ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்**

ஊரன் அடிகள்
த.பெ.எண். 2
வடலூர், கடலூர் மாவட்டம்

# வெள்ளிவிழா வாழ்த்து

இது கலிகாலமல்ல. கம்பன் காலம். கலியுகமல்ல, கம்பன்யுகம். நாடெங்கும் கம்பன் கழகங்கள் தோன்றித் தொண்டாற்றி வருகின்றன. ஆறில்லா ஊருக்கு அழகு பாழ் என்பது பழமொழி. கம்பன் கழகமில்லா ஊருக்குக் கவின் பாழ் என்பது இன்றைய புதிய மொழி. கடல்கடந்தும் கம்பன் புகழ் பரவிவருகிறது. இலங்கையிலும் கொழும்பில் ஒரு கம்பன் கழகம் தோன்றி 23 ஆண்டுகளாகத் தொண்டாற்றிவருகிறது. அண்மையில் சுவிட்சர்லாந்திலும் ஒரு கம்பன் கழகம் தோன்றியுள்ளது. கம்பன் கழகம் கடல் கடந்து சென்றிருப்பது ஒரு வியப்போ? பூமண்டலங் கடந்து மனிதர் சந்திரமண்டலம் சென்றால் உடனே அங்கும் ஒரு கம்பன் கழகம் தோன்றிவிடும். தமிழ்நாட்டில் வாழியூரில் 25 ஆண்டுகளுக்கு முன்னமேயே கம்பன் கழகம் தோன்றி 25 ஆண்டுகளாகப் பணியாற்றி இவ்வாண்டு வெள்ளிவிழாக் காண்பது மகிழ்ச்சியளிக்கிறது. வாழியூர் என்ற பெயரே நல்ல மங்கலப் பெயர். வாழியூர் கம்பன் கழகம் இன்னும் பல்லாண்டுகள் பணியாற்றி நாடு கம்பநாடாக, காந்தியடிகள் கூறிய ராம ராஜ்ஜியமாக ஆவதற்குப் பணிசெய்யுமாக

கம்பர்சீர் பரவுவார் வே.இராசவேலன் நல்ல செயலாளராக வாய்த்திருக்கிறார். 20 ஆண்டுகளுக்குமுன் நாம் இரத்தினகிரிக்குத் தொடர்சொற்பொழிவுகளுக்காக வந்தபோதே வாழியூர் இராசவேலனாரை நன்கு அறிவோம். அப்போதே துடிப்புமிக்க நல்ல இளைஞராகத் தோன்றினார். கம்பன் கழகத்தையும் வளர்த்து, வாழியூரையும் வளர்த்துத் தாமும் முறையாக நன்கு வளர்ந்து வரும் இராசவேலனார் மேலும் வளர வாழ்த்துகள். வாழியூர் வாழ்க! கம்பன் கழகம் வாழ்க! கழகத்தார் அனைவரும் வாழ்க! வாழ்க!! வாழ்க!!!

ஆசியுடன்
**ஊரன் அடிகள்**

பாலமுருகனடிமை
அருள்மிகு பாலமுருகன் திருக்கோயில்
இரத்தினகிரி, கீழ்மின்னல் – 632 517
வேலூர் மாவட்டம், தமிழ்நாடு
அன்புடையீர் அருளாசி

## வாழ்த்து

கம்பன் புகழ் பரப்பி கன்னித் தமிழ் வளர்ப்போம் என்ற உயரிய நோக்கத்தோடு காரைக்குடியில் கம்பர் அடிப்பொடி சா.கணேசன் அவர்கள் கம்பன் கழகத்தை நிறுவினர்.

கல்வியில் பெரியவன் கம்பன் இதை உள்வாங்கிக் கொண்ட பாரதியார்,

கல்வி சிறந்த தமிழ்நாடு – உயர்
கம்பன் பிறந்த தமிழ்நாடு

என்று புகழ்ந்து பாடியிருப்பது யாவரும் அறிந்ததே

காரைக்குடி கம்பன் கழகம் ஆண்டுதோறும் கம்பனில் ஆழங்கால்பட்ட அறிஞர் பெருமக்களை அழைத்துக் கம்பன் புகழ்பாடி கன்னித்தமிழ் வளர்க்கும் பொறுப்பில் ஈடுபட்டது. அக்காலத்திலேயே தமிழ் கூறும் நல்லுலகெல்லாம் கம்பன் கழகம் ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரூன்றியது. கம்பன் கழகங்கள் நகர்புரங்களில் காலூன்றி நவினம் நாட்டினவே ஒழிய சிற்றூர் பக்கம் செல்லவில்லை. அக்குறையை போக்க வாழியூர் வே.இராசவேலன் அவர்கள் தான் பிறந்த வாழியூரில் கம்பன் கழகத்தை நிறுவி 25 ஆண்டுகளாக நடத்தி வருகிறார். என்பது வியப்பிற்குரிய செய்திதான். வசதி குறைந்த குக்கிராமத்தில் விடாமுயற்சியாக தமிழ் அறிஞர்களை கூட்டி நாவிற்கும் செவிக்கும் விருந்து வைத்து மகிழும் அவரின் தன்னலமற்ற தமிழ்த் தொண்டு மிகவும் பாராட்டுக்குரியது.

வரும் 2004 –ம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் முதல் வாரத்தில் வாழியூர் கம்பன் கழகம் வெள்ளி விழா காண்கின்றது. அவ்விழாவில் மலர் ஒன்று வெளியிடவிருக்கிறார்கள். மலர் அறிவுக்கு விருந்தாகவும், மருந்தாகவும் அமையும் என்று எதிர்பார்க்கலாம். சிறந்த தமிழ் அறிஞர்களின் ஆய்வுக்கட்டுரைகள் மலரில் இடம் பெற்று மனம் பரப்பும் வகையில் வாழியூர் வே .இராசவேலன் தயாரிப்பார் என்பதில் ஐயமில்லை. வெள்ளி விழாவும் அதன் தொடர்பாக வெளிவரவிருக்கும் விழா மலரும் எல்லா வகையிலும் சிறப்புற அமைய எல்லாம் வல்லான் இக்குன்றுறை இளவழகனை இறைஞ்சி வாழ்த்தும்

ஆசியுடன்

**பாலமுருனடிமை**

சுவாமி சச்சிதானந்தா
ஸ்ரீ கமலக்கண்ணி தேவஸ்தானம்
ஸ்ரீ மகாலட்சுமி தேவஸ்தானம்
கலவை, வேலூர் மாவட்டம்
போன் 04173 – 242269

## வாழ்த்து

அன்புடையீர்

அருளாசி தங்கள் நலனை மிகவும் விரும்புகிறேன்.

தமிழ்நாட்டில் பல கம்பன் கழகங்கள் புகழோடு தோன்றி, தொய்வின்றி செயலாற்றி வருவதை பார்க்கிறோம். பெரும்பாலான கம்பன் கழகங்கள் பெரும் நகரங்களைச் சார்ந்தே உள்ளன. தங்களைப் போன்று ஒரு சிறிய கிராமத்தில் கம்பனுக்கு கழகம் கண்டு, வருடந்தோறும் சிறப்பான முறையில் விழாவெடுத்து வரும் தங்கள் திண்மையை எப்படி பாராட்டுவது என்றே தெரியவில்லை. கம்பனுக்கு விழாவெடுப்பதையே ஒரு வேள்வியாகக் கொண்டிருக்கும் தங்களைப் போன்றவர்களால் தான் தமிழ் வாழ்கிறது வளர்கிறது.

வே.இராசவேலன் என்றாலே வாழியூர் என்று சொல்லும் வகையில் ஊருக்கு பெருமை சேர்த்த தங்கள் தமிழ் பணியை பெரிதும் மெச்சுகிறேன்.

வாழியூர் கம்பன் கழகம் வெள்ளிவிழா காண்பதை அறிந்து பெருமையுடன் வாழ்த்துகிறோம்.

கம்பன் தமிழ்போல் தாங்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து தமிழ் தொண்டாற்ற வாழ்த்தும்

மிக்க அன்புடன்
**சுவாமி சச்சிதானந்தா**

**டாக்டர் வாசவன்**
**தலைவர், உலகத் தமிழ் எழுத்தாளர் சங்கம்**
**I /II அன்புக் காலனி. நந்தனம், சென்னை – 600 035**
**போன் 24349353**

## வாழ்த்து

வளமிகு வாழியூர் கம்பன் கழகம், வெற்றிமிகு வெள்ளிவிழாவை நோக்கி விரைவு நடைபோடும் உவப்பான செய்தி உம்பர் தவத்தினும் மேலாந்திருவாம். இம்மேலாந்திருவை வாழியூர் கம்பன் கழகத்திற்குப் பெரு நிதியாகச் சேர்த்திட்ட தங்கள் தம் பெருமையைச் சொல்வதற்கு எளிதோ? சிமிழ் போன்ற ஒரு சிற்றூரில் அமிழ்தினும் இனிய கம்பன் விழாக்களை நடத்தி தொடரும் தொல்லைகளைத் துரத்தி கம்பனைத் தோளில் சுமந்து கம்பன் புகழ் பரப்பும் தங்களின் ஆற்றலைச் சொல்லப் போமோ?

*கற்றார் இராமபிரான்அல்லாமல் மற்றும் கற்பரோ?*

என்றார் நம்மாழ்வார்

கற்றார்க்கு நாளும் களிப்பருளும் கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்க்கும் வாழியூர் கம்பன் கழகம் எந்தமிழ்போல் என்றும் வாழிய வாழிய

அன்புடன்
**டாக்டர் வாசவன்**

**நா.மகாலிங்கம்** பி.எஸ்.சி., எப்.ஐ.இ.,
தலைவர்
சக்தி நிறுவனங்கள்
கிண்டி, சென்னை – 600 032
(அ) 2350814 (வீ) 4996898

## வாழ்த்து

அன்புடையீர் வணக்கம்
வாழியூர் கம்பன் கழகம் வெள்ளி விழாக் கொண்டாடுவதும்
மலர் வெளியிடுவதறிந்தும் மகிழ்கிறேன்

கவிச்சக்கரவர்த்தி கம்பர் கவிஞர் மட்டுமல்லர் பரமஞானி. இராமாயணம் என்றோ நடந்து முடிந்த ஓர் இதிகாசக் கதை என்று எண்ணியவரல்லர். என்றும் நிலைத்திருக்கும் வாழ்வியல் நெறி இராமாயணம் என்பதை அறிந்து அதனைத் தமிழில் தந்தருளினார்.

கம்ப இராமாயணம் அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்பதனை உணர்த்துகிறது. அறம் ஒன்றே இறையுண்மையை நமக்கு உள்ளவாறு காட்ட வல்லது என்று அறிவிக்கிறது.

வாழியூர் கம்பன் கழகம் 25 ஆண்டுகளைக் கண்டு விழாக்கொண்டாடும் நேரத்தில் அதன் மிகப்பெரிய சாதனைகளுக்கு வித்தும் வேருமாகத் திகழும் கம்பர் சீர் பரவுவார் வே.இராசவேலன் அவர்களையும் அவருடன் ஒன்றியிருந்து பணி செய்யும் உறுப்பினர்களையும் பாராட்டுகிறேன். விழா மலர் சிறக்க வெளிவர வாழ்த்துகிறேன்.

கம்பன் கழகம் பலப்பல சாதனைகளைக் கண்டு பொன்விழா, மணிவிழா நூற்றாண்டு விழாக்கள் காண, தெய்வமாக்கவி கம்பர் திருவடிகளை நினைத்து இறைஞ்சுகிறேன்.

தங்கள் அன்புள்ள
**நா.மகாலிங்கம்**

**தென்கச்சி கோ.சுவாமிநாதன்**
முன்னாள் துணை இயக்குநர்
சென்னை வானொலி நிலையம்

## வாழ்த்து

வாழ்க வளர்க

காலம் கடந்தும் பேசப்படுகிற ஒரு காவியம் கம்பனின் காவியம்

எனக்குத் தெரிந்தவரையில் கம்பனைப் போல் வேறு எந்த புலவரையும் கண்டதில்லை என்று வியக்கிறார் பாரதியார்.

வான்மீகி செய்த வடமொழி நூல் ஒன்றினுக்குத் தேன்பூசி தந்திருக்கிறார் கம்பர் என்று கூறுகிறார் கவிஞர் கண்ணதாசன்.

இப்படி எல்லோராலும் போற்றப்படுகிற கம்பனை......

காலம் தோறும் புதிய தலைமுறைகளின் கவனத்திற்குக் கொண்டுவருகிற பெரும் பணியைச் செய்து கொண்டிருப்பவை கம்பன் கழகங்கள் அந்த வரிசையில்

வாழியூர் கம்பன் கழகம் இன்று தனது வெள்ளிவிழாவைக் கொண்டாடுகிறது. இதற்கு பின்னனி சக்தியாக இருந்து கொண்டிருக்கிற இனிய நண்பர் வாழியூர் வே.இராசவேலன் அவர்கள் நம் வாழ்த்துக்கும் பாராட்டுக்கும் உரியவர்

மனித நேயம் அவ்வப்போது துளிர்விடவும் தொடர்ந்து வளரவும் இது போன்ற சேவை இன்றைக்கு மிகவும் தேவை

வாழியூர் கம்பன் கழகம் வாழ்க! வளர்க!

அன்புடன்
**தென்கச்சி**

டாக்டர் .த. குமரகுரு எம்.பி.பி.எஸ்.,
இயக்குநர், குமரன் ஆஸ்பிட்டல்
காந்திநகர், வேலூர்,

## வாழ்த்து

வாழியூர் கம்பன் கழகத்தின் சார்பில் ஒரு சிறப்பு மலர் வெளிவருவது அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். 25 ஆண்டு காலம் வாழியூர் போன்றதொரு சிறுகிராமத்தில், கம்பன் என்றாலே யாரென்று அறியாத பாமர மக்கள் மிகுந்த பகுதியில் கம்பன் கழகம் என்ற அமைப்பினை நிறுவி, தமிழ் மாநிலத்தைச் சேர்ந்த பல்வேறு அறிஞர்களை அழைத்து மக்களின் அறிவுக்கு விருந்து படைப்பது என்பது போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியது. இந்த இமாலயச் சானையைச் செவ்வனே செய்து வரும் நண்பர் வாழியூர் வே.இராசவேல்ன் அவர்களை வாழ்த்திப் பாராட்டுகிறேன்.

தொடரட்டும் அவரது சீரிய பணி
திக்கெட்டும் பரவட்டும் கம்பன் புகழ்

அன்புடன்

டாக்டர் த.குமரகுரு

# மலர்க்காவில் நுழையும்முன்

பேரன்புடையீர் வணக்கம்.

நேற்று ஆரம்பித்ததுபோல் இருக்கிறது 25 ஆண்டுகள் ஓடிவிட்டன. பேராசிரியர் புரசை ச.அரங்கநாதன் அவர்கள் இக்கழகத்தை ஆரம்பித்து வைத்தார். 4 முதல் 9 –ம் ஆண்டுவரை சிறியதாக மலர் வெளியிட்டோம். அதற்கு அடுத்து இவ்வெள்ளி விழா மலர் உங்கள் கைகளில் தவழ்கிறது,

இம்மலருக்கு வாழ்த்துரை வழங்கிய பேரூர் ஆதீனம், மதுரை ஆதீனம், தவத்திரு ஊரன் அடிகள், தவத்திரு பாலமுருகனடிமை, சுவாமி சச்சிதானந்தா, டாக்டர் வாசவன், அருட்செல்வர் நா.மகாலிங்கம், தென்கச்சி, டாக்டர் குமரகுரு ஆகியோருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கட்டுரை அனுப்பிவைத்து ஊக்கமளித்த கம்பர் மாமணி ஜி.கே.சுந்தரம், திரு.கோ.செல்வம், பேராசிரியர் அரங்க. இராமலிங்கம், பேராசிரியர் புரிசை.நடராசன், கவிஞர். சிவஞானவள்ளல், குறளேந்தி. கோதண்டராமன், திரு.மணிஅரசு ஆகியோருக்கு நன்றி

மேலும் காளத்தி வேடனும் கங்கை வேடனும் கட்டுரையை மலரில் அச்சிட அனுமதியளித்த சென்னை பழனியப்பா பிரதர்ஸ் அவர்களுக்கு நன்றி

சென்னை மாதவி பதிப்பகம், ஆசிரியர் குறளியம், காஞ்சி திரு.மா.வரதராசன் ஆகியோருக்கும் எங்கள் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மலருக்கு விளம்பரங்கள் கொடுத்தவர்ளுக்கும், விளம்பரங்கள் வாங்குவதற்கு உதவி புரிந்தவர்களுக்கும் எங்கள் நன்றி.

மலர்வெளிவர முக்கிய காரணமாயிருந்த மனோகர் ஆப்செட் பிரிண்டர்ஸ் உரிமையாளருக்கும், ஊழியர்களுக்கும் எங்கள் நன்றி.

இம்மலரைப் பற்றி குறை நிறைகளை எழுதுங்கள்.

அன்புடன்

மலர்க் குழுவினர்

# தெரிந்துகொள்ளுங்கள்

| | | |
|---|---|---|
| B.A., | - க.இ., | - கலை இளைஞர் |
| B.Com., | - வணி.இ., | - வணிக இளைஞர் |
| B.E., | - பொறி.இ., | - பொறியியல் இளைஞர் |
| B.Ed., | - கல்.இ., | - கல்விமுறை இளைஞர் |
| B.G.L., | - பொ.ச.இ., | - பொது சட்ட இளைஞர் |
| B.Lib.Sc., | - நூ.அறி.இ., | - நூலக அறிவியல் இளைஞர் |
| B.Lit., | - இல.இ., | - இலக்கிய இளைஞர் |
| B.L., | - ச.இ., | - சட்ட இளைஞர் |
| B.O.L., | - கீ.க.இ., | - கீழைக் கலை இளைஞர் |
| B.Sc., | - அறி.இ., | - அறிவியல் இளைஞர் |
| B.Sc., (Agri) | - அறி.இ.,(வேளாண்) | - வேளாண் அறிவியல் இளைஞர் |
| B.T., | - ப.இ., | - பயிற்று இளைஞர் |
| B.V.Sc., | - வி.க.இ., | - விலங்கியற் கலை இளைஞர் |
| C.E.O., | - ந.சு.அ., | - நடுவண் சுங்கவரி அதிகாரி |
| C.E.O., | - மு.க.அ., | - முதன்மைக் கல்வி அதிகாரி |
| C.I.D., | - கு.ஆ.து., | - குற்ற ஆய்வுத் துறை |
| D.E.O., | - மா.க.அ., | - மாவட்டக் கல்வி அதிகாரி |
| D.Lit., | - இல.மு., | - இலக்கிய முனைவர் |
| D.M.O., | - மா.ம.அ., | - மாவட்ட மருத்துவத் துறை அதிகாரி |
| D.M.S., | - ம.அ.மு., | - மருத்துவ அறுவைத் துறை முனைவர் |
| D.M.S., | - ம.ப.இ., | - மருத்துவப் பணித்துறை இளைஞர் |
| I.A.S., | - இ.ஆ.ப., | - இந்திய ஆட்சித் துறை பணி |
| I.C.S., | - இ.பொ.ப., | - இந்தியப் பொது ஆட்சிப் பணி |
| M.A., | - க.மு., | - கலை முதுவர் |
| M.B.B.S., | - ம.இ.அ.இ., | - மருந்தியல் இளைஞர் அறுவை இளைஞர் |
| M.Com., | - வணி.மு., | - வணிக முதுவர் |
| M.D., | - ம.மு., | - மருத்துவத்துறை முனைவர் |
| M.L., | - ச.மு., | - சட்டத்துறை முதுவர் |
| M.L.A., | - ச.ம.உ., | - சட்ட மன்ற உறுப்பினர் |
| M.L.C., | - ச.மே.ம.உ., | - சட்ட மேல் மன்ற உறுப்பினர் |
| M.Lib.Sc., | - நூ.அறி.மு., | - நூலக அறிவியல் முதுவர் |
| M.Lit., | - இல.மு., | - இலக்கிய முதுவர் |
| M.O.L., | - கீ.க.மு., | - கீழைக்கலை முதுவர் |
| M.S., | - அ.மு., | - அறுவை முதுவர் |
| M.Sc., | - அறி.மு., | - அறிவியல் முதுவர் |
| Ph.D., | - மெய்.மு., | - மெய் விளக்கத்துறை முதுவர் |
| M.Ed., | - கல்.மு., | - கல்வி முதுவர் |
| (Hons) | - சிறப்பு., | |
| M.Phill., | - மொ.மு., | - மொழியியல் முதல்வர் |

## கம்பர் வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| தந்தை | : | ஆதித்த அர்ச்சகர் |
| தாயார் | : | திலகவதியார் |
| பிறந்தது | : | தேரழுந்தூர் |
| கம்பர் காலம் | : | கி.பி.840 – 920 |
| புரவலர் | : | சடையப்ப வள்ளல் |
| துணைவியார் | : | நிகர்த்தவல்லி |
| திருமணம் | : | மயிலையில் |
| பிறந்த மக்கள் | : | அம்பிகாபதி, காவேரி |
| கம்பர் மாளிகை | : | தேரழுந்தூரிலும், அம்பியிலும் |
| முதல் அரங்கேற்றம் | : | ஏரெழுபது, திருக்கை வழக்கம் |
| இடம் | : | காஞ்சியில் |
| இராமாயணம் எழுதத் தொடங்கியது | : | வெண்ணெய் நல்லூர் |
| கம்பர் இறுதியாக வாழ்ந்தது | : | சேரமன்னன் தாணுரவி கோட்டை பத்மநாபபுரம் |
| கம்பர் சமாதி | : | நாட்டரசன் கோட்டை |
| கம்பர் கோட்டம் | : | தேரழுந்தூரில் |
| கம்பர் மணிமகுடம் | : | காரைக்குடியில் |
| கம்பருக்கு வழங்கிய விருதுகள் | : | 1. கம்பநாட்டாழ்வார்<br>2. கவிச்சக்கரவர்த்தி<br>3. அபிநவகவிநாதன்<br>4. கவிஜயன்<br>5. கவிராஜன் |
| கம்பர் அஞ்சல் தலை | : | 5 – 4 – 1966 –ல் வெளியிடப்பட்டது |
| கம்பர் குலம் | : | உவச்சவர் குலம் |
| கம்பர் பேரன் | : | தண்டி |

நன்றி : மா.வரதராசன், கம்பர் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டே

# காளத்தி வேடனும் கங்கை வேடனும்

சொல்லின் செல்வர் ரா.பி.சேதுப்பிள்ளை

தமிழ்நாட்டுக் காளத்தி மலையிலேயே தோன்றினான் ஒரு வேடன். வடநாட்டுக் கங்கைக் கரையிலே பிறந்தான் மற்றொரு வேடன். அவ்விருவராலும் வேடர்குலம் பெருமையுற்றது. காளத்தி வேடனைக் கண்ணப்பன் என்றும், கங்கை வேடனைக் குகன் என்றும் இலக்கிய உலகம் போற்றும். இருவரும் உயரிய அன்பு நெறியைக் கடைப்பிடித்து அழியாப் புகழ் பெற்றனர்.

காளத்தி நாதன்பால் வைத்த அன்பினால் தன் கண்ணையும் பெயர்த் தெடுத்த கண்ணப்பன் பெருமை தமிழ் நாடெங்கும் பரவிநின்றது. எல்லையற்ற அன்பிற்கு அவ்வேடர் பெருமானே எடுத்துக்காட்டாயினர்.

*கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்*
*என்னப்பன் என்னொப்பில் என்னையும்ஆட் கொண்டருளி*
*வண்ணப்ப ணித்தென்னை வாவென்ற வான்கருணைச்*
*சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ*

என்று வண்டை நோக்கிப் பாடும் பான்மையில் கண்ணப்பனது எல்லையற்ற அன்பின் திறத்தினை மாணிக்கவாசகர் நன்கு விளக்கியுள்ளார். திருவாசகத்திலும் தேவாரத் திருப்பாசுரங்களிலும் கண்ணப்பன் பெருமை பேசப்படுவதால் சைவ சமயத்தை நிலை நிறுத்திய நால்வருக்கும் அவன் முந்தியவன் என்பது நன்கு விளங்குகின்றது. காளத்தி நாதனை வணங்கிய திருஞானசம்பந்தர் கும்பிட்ட பயன் காண்போர் போல் வேடர் பெருமானாகிய கண்ணப்பனைக் கைதொழுதாரென்று சேக்கிழார் அழகாக எழுதிப்போந்தார்.

கவிக்கு நாயகராகிய கம்பர் இராம கதையை வடமொழிக் காவியத்தினின்றும் எடுத்துக்கொண்டாரேனும் அதனைத் தமிழ் நாட்டாருக்கு ஏற்ற முறையில் புதுக்கி இனியதொரு விருந்தாக அளித்துள்ளார். இராமனிடம் அன்பு பூண்ட கங்கை வேடனை உருவாக்கும் பொழுது, கம்பர் உள்ளத்தில் காளத்தி வேடனைக் கருவாகக் கொண்டு கங்கை வேடனாகிய குகனை அவர் வார்த்து

வடித்துள்ளாரென்று தோற்றுகின்றது. இதற்கு இரண்டொரு சான்றுகள் காட்டுவேன்.

கோசலநாட்டு இளவரசனாகிய இராமன், தாயின் சொல்லைத் தலைக்கொண்டு, தனக்குரிய நாடு துறந்து கங்கைக் கரையை வந்தடைந்தான் என்று அறிந்த குகன் அக்குரிசிலைக் காணப்புறப்பட்டான். வான்மிக முனிவர் எழுதிய வடமொழிக் காவியத்தில் குகன் இராமனைக் காணப்புறப்படும் கோலம், ஓர் அரசன் மற்றோர் அரசனைக் காண எழுகின்ற தன்மையில் அமைந்திருக்கின்றது. ஆனால் கம்பர், ஆண்டவனைக் காணச் செல்லும் அடியவனாகக் குகன் கோலத்தைத் திருத்தி யமைத்துள்ளார்.

*தேவா நின்கழல் சேவிக்க வந்தனன்*
*நாவாய் வேட்டுவன் நாயடியேன்.*

என்று குகனே கூறுதலால் இவ்வுண்மை விளங்கும்.

காளத்தி வேடன் தனக்கினிய இறைச்சியே தன் தலைவனாகிய இறைவனுக்கும் இனியதாகும் என்று எண்ணி அதனை எடுத்து ஊட்டியவாறே குகன் தனக்கினிய கங்கையாற்று மீனையும் கொம்புத் தேனையுமே எடுத்துக் கொண்டு சென்றான். அவ் விரண்டையும் இராமன் திருமுன்பு வைத்து, 'ஐயனே! தேனும் மீனும் திருத்திக் கொணர்ந்தேன். தேவரீர் திருவமுது செய்தருளல் வேண்டும்' என்று இறைஞ்சி நின்றான் அச்செயல் நிகழும்போது இராமனுடன் விருத்த மாதவர் சிலர் உரையாடிக் கொண்டிருந்தனர். அவர்கள் குகனது மனப்பான்மையை அறியாதவராய் தகாத பொருள்களை வேடன் எடுத்துவந்து அபசாரம் செய்து விட்டான் என்றெண்ணி வெறித்து நோக்கினர். அவர்கள் மனத்தில் நிகழ்ந்த கருத்தினை அறிந்த இராமன்,

*அரியதாம் உவப்ப உள்ளத்து*
*அன்பினால் அமைந்த காதல்*
*தெரிதரக் கொணர்ந்த என்றால்*
*அமுதினும் சீர்த்த வன்றே*

என்று விருத்த மாதவரைத் தெருட்டி யருளினான். இதற்கு நேரான செயல் கண்ணப்பன் சரித்திரத்தில் உண்டு. கண்ணப்பனுக்கு இனிய காளத்தி நாதனை சிவகோசரியார் என்றும் வேதியர் முறைப்படி பூசனை செய்துவந்தார். கண்ணப்பன் இறைச்சியைக்கொண்டு

திருக்கோயிலில் இட்டதைக்கண்டு செய்வதொன்றறியாது கவலை கொண்டிருந்தார். அதை உணர்ந்த இறைவன் அவர் கனவிலே தோன்றி,

அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீயென் றருள்செய்வார்.

இது சேக்கிழார் பெருமான் திருவாக்கு.

காளத்தி நாதன்பால் அன்பு பூண்ட கண்ணப்பனைப் போலவே குகனும் இராமனைப் பிரிந்திருக்கலாற்றாத மனப்பான்மை பெற்றான். அந்தி மாலை வந்தடைந்த பொழுது இராமன் குகனை நோக்கி 'அப்பா! இன்றிரவு உன் ஊருக்குச் சென்று, நாளைக் காளையில் கங்கை யாற்றைக் கடப்பதற்குப் படகுகள் கொண்டு வருக' என்று சொல்லிய பொழுது, குகனுடைய மனம் அனலிடைப்பட்ட மெழுகுபோல் உருகுவதாயிற்று. 'என் ஐயன், என் ஆண்டவன், என்னைப் போ என்றானே! அவனை விட்டு நான் எவ்வாறு போவேன்? எங்கே போவேன்? அவனுடனிருத்தலே எனக்குப் பேரின்பம். அவனைப் பிரிந்திருத்தல் பெருந்துன்பம்' என்று எண்ணி இராமனை நோக்கி 'ஐயனே! நான் போகலாற்றேன், ஈண்டிருந்து என்னால் இயன்ற தொண்டு செய்வேன்' என்றான்.

கார்குலாம் நிறத்தான் கூறக்
காதலன் உணர்த்து வான்இப்
பார்குலாம் செல்வ நின்னை
இங்ஙனம் பார்த்த கண்ணை
ஈர்கிலாக் கள்வ னேன்யான்
இன்னலின் இருக்கை நோக்கித்
தீர்கிலேன் ஆன தைய
செய்குவன் அடிமை என்றான்.

என்று குகன் பெருமையை அறிவிக்கும் கம்பர் பாட்டு மிக்க அழகு வாய்ந்ததாகும்.

'என் பெருமானே! அயோத்திமா நகரில் அரியாசனத்தில் மன்னர் மன்னனாய் மணிமுடி தரித்துச் செங்கோலேந்தி அரசாளும்

கோலத்தில் காண வேண்டிய உன்னைச் சடை முடியும் மரவுரியும் தரித்துக் கானகப் புல்லில் அமர்ந்திருக்கக் கண்டேனே! என் கண் செய்த பாவம் கடலினும் பெரிதன்றோ? இந்தக் கோலத்தில் உன்னைக் கண்ட என் கண்களைப் பறித்தெறியாத பாவியேன் நான். ஆயினும் ஐயனே! உன்னை விட்டுப் போக என்னால் இயலாது; என்னா லியன்ற சிறுதொண்டு செய்துகொண்டு ஈண்டுத்தான் இருப்பேன்' என்று மனங்கசிந்து பேசினான். கங்கை வேடன் பேசிய வாசகத்தின் சுவையை அறிந்த இராமன்

*சீதையை நோக்கித் தம்பி*
*திருமுகம் நோக்கித் தீராக்*
*காதலன் ஆகும் என்று*
*கருணையின் மலர்ந்த கண்ணன்*
*யாதினும் இனிய நண்ப*
*இருத்திஈண்டு எம்மோ டென்றான்.*

'யாதினும் இனிய நண்ப' என்று அழைத்தமையால் குகன் இராமனுக்குப் பொன்னினும் இனியன் ஆனான், புகழினும் இனியன் ஆனான், மற்றெதனினும் இனியன் ஆனான் என்பது வெளிப்படையாக விளங்குகின்றது. இங்ஙனம் ஆட்கொள்ளப்பட்ட குகன் அகமும் முகமும் மலர்ந்தான். அன்றிரவு நாணற் பாயலில் இராமனும் சீதையும் படுத்துறங்க, இலக்குவன் வில்லை யூன்றிய கையோடு அவ்விருவரையும் காத்து நிற்க, அன்புவடிவாய குகன் முறையாக மூவரையும் காத்து நின்றான். இரவு முழுவதும் கண்ணிமையாது காவல் செய்த குகன், இன்பப் பணியிலே ஈடுபட்டான். காளத்தி நாதனை இராப் பொழுதில் கண்ணிமையாது காத்து நின்ற கண்ணப்பனைப் போலவே இராமனைக் காத்து நின்றான் குகனும்.

இன்னும் காளத்தி வேடனது அன்பிற்கும் கங்கை வேடனது அன்பிற்கும் ஒரு சிறந்த ஒற்றுமையுண்டு. இருவரும் இறைவனிடம் பயன் கருதாப் பக்தி பூண்டவர்கள்; 'கூடும் அன்பினில் கும்பிடுதல் தம் கடன்' என்று கொண்டவர்கள். இத்தகைய பக்தியே சாலச் சிறந்தது என்று சான்றோர் கூறுவர். இராமன், நாடு துறந்து காடு புகுந்த பின்னர், அவன் பால் அன்பு கொண்டவர் மூவர். கங்கைக் கரையிலே குகன்

இராமனைச் சேர்ந்தான், கிஷ்கிந்தையில் சுக்ரீவன் வந்து சேர்ந்தான், இலங்கையில் விபீஷணன் வந்து அடைந்தான். தன்னை வந்தடைந்த மூவரையும் தன்னுடைய குடும்பத்திலே சேர்த்துக் கொண்டான் இராமன். எனினும், சுக்ரீவன் இராமனிடம் அன்பு பூண்டதற்குக் கைமாறாகக் கிஷ்கிந்தை அரசைப் பெற்றான், விபீஷணன் இராமனைச் சரணடைந்து இலங்கையரசைப் பெற்றான். குகன் ஒருவனே பக்திக்காகப் பக்தி செய்து, கைம்மாறு கருதாத அன்பின் நீர்மையை நன்கு விளக்கிக் காட்டினான்.

இவ்வாறு கனிந்த அன்பு வாய்ந்த காளத்தி வேடனையும், கங்கை வேடனையும் குறிக்கோளாகக் கொண்டு இறைவனை நினைந்துருகிய அன்பர் நிலையும் அறியத் தக்கதாகும். அன்பைப் பெருக்கி இன்பப் பேறடையக் கருதிய ஆன்றோர் இவ்விரு அடியாரது அன்பின் பெருமையை நினைந்து 'எற்றே இவர்க்கு நாம்' என்று உள்ளம் உருகினார்.

முற்றத் துறந்த பட்டினத்தடிகள் என்று தமிழகம் போற்றிப் புகழும் பெரியார், கண்ணப்பனது அருஞ் செயலை நினைத்து கரைந்து உருகுவாராயினர். காளத்தி மலையி லமர்ந்த ஈசனுக்கு ஆளாகக் கருதிய அடிகள்,

*வாளால் மகவரிந்து ஊட்டவல் லேனல்லன் மாதுசொன்ன*
*சூளால் இளமை துறக்கவல் லேன் அல்லன் தொண்டுசெய்து*
*நாளாறில் கண்ணிழந்து அப்பவல் லேனல்லன் நான் இனிச் சென்று*
*ஆளாவ தெப்படி யோதிருக் காளத்தி அப்பருக்கே*

என்று அகம் குழைந்தார். 'ஐயோ! பெற்ற பிள்ளையை வாளாலரிந்து இறைவனுக்கு இன்னமுதூட்ட வல்லேனா? திருநீலகண்டன் மேல் மனையாள் வைத்த ஆணை கடவாது இளமையிலேயே ஐம்பொறிகளையும் வென்று, இன்பம் துறக்க வல்லேனா? ஆறு நாள் பழகிய பான்மையில் ஆராத அன்பு வாய்ந்து கண்ணைப் பறித்து இறைவன் கண்களில் அப்ப வல்லேனா? இத்தகைய பொக்கனாகிய யானும், மெய்யடியார்போல் நடித்து, வீடகத்தே புகுந்திட விழைகின்றேன்' என்று உள்ளத் துறவமைந்த உயரிய அடிகள் உருகுவாராயினர். கடந்தோர்க்கும் கடத்தலரியதாய் மக்கட் பாசம் நீத்த ஒரு தொண்டர், பெரிய சிறுத் தொண்டராய்ப் பேறு பெற்றார்.

மனையாள்மீது வைத்த பாசம் துறந்த மற்றொரு தொண்டர் இறைவனது அன்பிற்குரியராயினர். கண்ணிற் சிறந்த உறுப்பில்லை என்றறிந்தும் ஈசன்பால் வைத்த அன்பினால், இரு கண்களையும் ஈர்த்தளிக்க இசைந்த ஒரு தொண்டர் மாறிலா இன்பத்தில் மகிழ்ந்தார். இவ்வாறு அகம் புறமென்னும் இருவகைப் பற்றையும் அறவே களைந்து, இறைவன்பால் அன்பை வளர்த்த அடியாரது நிலையை நினைந்து பட்டினத்தடிகள் உருகும் பான்மை அறிந்து போற்றத் தக்கதாகும்.

காளத்தி வேடனைக் குறிக்கோளாகக் கொண்டு அடிகள் கரைந்துருகியவாறே, கங்கை வேடனை இலக்காகக் கொண்டு, வானர வேந்தனான சுக்ரீவன் வாடி வருந்தினான். இருமையும் தரும் பெருமானாய இராமனிடம் எப்பயனையும் கருதாது விழுமிய அன்பு பூண்ட வேடனது பெருமையையம் தனது சிறுமையையும் நினைத்துச் சுக்ரீவன் சிந்தை தளர்ந்தான். வானரசேனை இலங்கைமா நகர்ப்புறம் எய்தியபோது, அப்படையின் திறன் அறியுமாறு தன் நகரில் நின்று நோக்கிய இலங்கை வேந்தனைக் கண்டான் வானர மன்னன். அவன் உள்ளத்தில் சீற்றம் பொங்கி எழுந்தது, பஞ்சின் மெல்லடிப் பாவையாகிய சீதையை வஞ்சனையாற் கவர்ந்து, சிறை வைத்த அரக்கர்கோனைக் கொன்று பழி தீர்க்கக் கருதி அவன் மீது பாய்ந்தான். வீரராகிய இருவரும் நெடும்பொழுது கடும் போர் விளைத்தார்கள். இலங்கை நாதனது அளவிறந்த வலிமையை அறிந்த வானரத் தலைவன் அவனை வெல்ல இயலாது அவன் தலைமீதிருந்த மணிமுடியைக் கவர்ந்து மீண்டும் இராமனது பாசறையில் வந்தடைந்தான். காலனுக்கும் காலனாயமைந்த அரக்கன் கையினின்றும் தப்பி வந்த வானர வீரனைக் கண்டு இராமன் களிகூர்ந்தான் அந் நிலையில் அன்பினால் அகங் குழைந்த வானர மன்னன், ஐயனை நோக்கி,

காட்டிலே கழுகின் வேந்தன்
செய்தது காட்ட மாட்டேன்
நாட்டிலே குகனார் செய்த
நன்மையை நயக்க மாட்டேன்

*கேட்டிலேன் அல்லேன் இன்று*
*கண்டும்அக் கிளியன் னாளை*
*மீட்டிலேன் தலைகள் பத்தும்*
*கொணர்ந்திலேன் வெறுங்கை வந்தேன்.*

என்று மனம் வருந்தி மொழிந்தான். 'அந்தோ! காட்டில் வாழும் கழுகின் வேந்தனும், நாட்டில் வாழும் நல்வேடனும், காட்டிய அன்பை நான் காட்ட இயலாதவ னாயினேன். இலங்கை மாநகரில் சிறையிருந்த சோகத்தாளாய நங்கையை இங்கே கொண்டு வர வலியற்று வெறுமையாகக் கண்டு வந்தேனே! நல்லோர்க்கு இடர் விளைக்கும் அரக்கனை எதிர்த்தும், அவன் சிரங்களைக் கொய்து கொணராது வெறுங்கையனாய் வந்தேனே' என்று வானர மன்னன் வருந்தினான்.

காட்டிலே கழுகின் வேந்தன் ஆற்றிய கடமையையும் அறிவோமாயின், வானர வீரனது சொல்லின் பொருள் இனிது விளங்கும். கானகத்தில் தனியாளாய் இருந்த தையலை, இலங்கை வேந்தன் வஞ்சனையாற் கவர்ந்து மனோ வேகமாகச் செல்லும்பொழுது, ஆதரவற்று அரற்றிய மங்கையின் அழுகுரல் கேட்டுக் கழுகின் காவலன் காற்றினுங் கடுகி வந்தான், அறநெறி தவறிய அரக்கனுடன் நெடும்பொழுது கடும் போர் புரிந்து ஆவி துறந்தான். இவ்வாறு ஆதரவற்ற சீதைக்காக அறப்போர் புரிந்து ஆவி நீத்த கழுகின் வேந்தன், 'தெய்வ மரணம்' எய்தினான் என்று இராமன் போற்றிப் புகழ்ந்தான். 'தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு' என்று சொல்லின் செல்வனாகிய அனுமன் புகழ்ந்துரைத்தான். அரன் அளித்த வாளுடையானை வெறும் அலகுடையான் வெல்லுதல் இயலாதென்றறிந்தும், அறநெறி திறம்பிய அரக்கனோடு பொருது ஆவி துறத்தலே தன் கடமை என்று அறிந்து கழுகின் வேந்தன் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டான். இவ்வாறு இராமனது சேவையில் அமர் புரிந்து இறக்கவும் ஒருப்படாத தனது குறையை நினைத்து வானர வீரன் வருந்தினான்.

இனிக் கங்கைக் கரையின் காவலனாகிய குகன் பரதனது பரந்த சேனையைக் கண்டபோது, அவன் இராமனை வெல்லக் கருதி வந்தான் என்று எண்ணித் தன்னுயிரையும் ஒரு பொருளாகக் கருதாது போர்க் கோலம் புனைந்து.

ஆழநெ டுந்திரை யாறுக டந்திவர் போவாரோ
வேழநெ டும்படை கண்டுவி லங்கிடும் வில்லாளோ
தோழமை என்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ
ஏழமை வேடன்இ றந்திலன் என்றெனை ஏசாரோ

என்று வீரமொழி பகர்ந்து தன் தோழனுக்காக உயிரையும் கொடுக்க இசைந்து நின்றான். ‘என்காவலில் அமைந்த கங்கை யாற்றைக்கடந்து இவர் போவாரோ? தோழன் என்று நாயகன் உரைத்த சொல் ஒரு சொல்லன்றோ? நன்றி மறவாத நாய் போல், தலைவனது ஆணைக்கடங்கிக் காவல் புரியும் ஏழையேன், அமர்க்களத்தில் இறந்த பின்னன்றோ, பரதன் இராமனைப் பார்க்க வேண்டும்’ என்று குகன் கூறிய மொழிகளில் தலையாய அன்பு தழைத் திலங்கக் காணலாம். இவ்வாறு குகனைப்போல் உயிர் கொடுக்கத் துணியவும் இயலாத தனது சிறுமையை நினைத்துச் சுக்ரீவன் வருந்தினான்.

ஆகவே, காளத்தி வேடனும் கங்கை வேடனும் அன்பு நெறியில், ஒப்பா ரின்றி உயர்வுற்ற ஏனைய அன்பர்க்கு ஒரு கலங்கரை விளக்கமாக அமைந்திலங்கும் தன்மை இனிது விளங்கும்.

– நன்றி. பழனியப்பா பிரதர்ஸ், சென்னை.



# கம்பன் காவியத்தில் ....

## மரியாதை - ஆச்சாரம் - அரசியல் - மரபுகள்

கம்பர் மாமணி. ஜி.கே.சுந்தரம்

இந்திய சமுதாய வாழ்க்கையில் அவ்வப்போது நிகழும் விழாக்கள், சடங்குகள், அரசியல் நிகழ்ச்சிகள் ஆகியவைகளில் அந்தந்த சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப, மரியாதைகளும், ஆசாரம் என்னும் முறைகளும் மரபுகளும் உரியவாறு பழங்காலம் கடைப்பிடிக்கப் படுகின்றன.

இவற்றை நம் புராண இதிகாச கவிதைகளிலும் சிறப்பாகவே காணலாம்.

இதனை ஆங்கிலத்தில் Etiquette ( Forms of Decorum) என்றும் Protocol :- The customs and regulations dealing with ceremonies and etiquette of the diplomatic carps, others a court or capital, the mititary etc., என்றும் விளக்கம் தருகிறார்கள்.

இவை யாவும் குடும்ப விழாக்கள், கோயில் விழாக்கள் ஆகியவைகளில் உரியவர்க்குப் பொருத்தமான கௌரவத்தை அல்லது மரியாதையை அளித்து வரப்படுகின்றன.

உதாரணமாகத் திருமணங்களில் சம்பந்திகளுக்குக் கொடுக்கப்படுகின்ற கௌரவம், கோயில்களில் விழாக்களின் போது, தர்மகர்த்தாக்களுக்கு அளிக்கப்படுகின்ற முதல் மரியாதைகள் போன்றவை.

அடுத்து, அரசாங்க ரீதியில் பார்த்தால், நாட்டின் தலைநகர், நீதிமன்றங்கள், இராணுவம் போன்ற இடங்களிலும், நிகழ்ச்சிகளிலும் அந்தந்தப் பதவி வகிப்பவரின் தகுதிக்கு ஏற்ப மரபுகளும் விதி முறைகளும் உரிய முறையில் கடைப்பிடிக்கப்படுகின்றன.

கம்ப இராமாயணத்தில், கம்பன் இந்த விதி முறைகளைக் குறிப்பிட்டு இருப்பதையும் நன்கு காணமுடிகிறது.

கவிச்சக்கரவர்த்தி கம்பன் உலகியலை நன்றாக அறிந்தவன். அரசியல் நடைமுறைகளையும், நுணுக்கமாகவே அறிந்திருப்பவன்.

காரணம், அவன் வெறும் புலவனாக மட்டும் இல்லாமல்,

சடையப்ப வள்ளல், சோழ மன்னன் அவை போன்றவைகளிலும் முக்கியமான பங்கு கொண்டிருந்தவன் ஆகையால் அவனுக்கு மேலே சொல்லப்பட்ட முறைகள் யாவற்றிலும் நேரில் கண்டறிந்த அனுபவம் உண்டு.

எனவே, தன் காவியத்தில் இவற்றைக் கவனமாக கையாண்டுள்ளான்.

தனக்குப் பின் கோசலத்தை ஆள்வதற்கு வாரிசு இல்லை என்ற மனக்கவலையை வேறு எவரிடத்திலும் தசரதன் சொல்ல முடியாது. அதைச் சொல்வதற்கும் உரிய பரிகாரம் தேடுவதற்கும் உரியவர் குலகுருவாகிய வசிட்டன் ஒருவரே ஆவார்.

ஆதலால், அவரிடம் கூறினான் அவரும் மன்னனின் மனக் கவலையை மாற்ற உரிய வகையைத் தனக்குள்ளே சிந்தித்து இராமாவதாரத்தை மனக்கண்ணால் அறிய கலைக்கோட்டு முனிவரை அழைத்து வர, ஆலோசனை கூறினார்.

இதைக் கேட்டதும் கலைக் கோட்டு முனிவரை அழைத்து வர, வேறு உயர் அதிகாரிகளை மன்னன் அனுப்பியிருக்கலாம். ஆனால், தசரதன் அரச மரபும், மரியாதையும் நன்கு அறிந்தவன் ஆதலாலும் முனிவர் வருவது முழுக்க தன் சொந்த விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கேயாகும் என்று எண்ணி, தசரதன் தானே நேரில் தேரில் புறப்பட்டுச் சென்றான்.

தன் நாட்டிற்குத் தசரதன் வருகின்றான் என்ற செய்தியை அறிந்த மன்னன் ரோமபதன், கடிதில் எழுந்து தன் நாட்டு எல்லைக்குத் தேருடன் வந்து சக்கரவர்த்தி தசரதனை வரவேற்று, வீழ்ந்து வணங்கி, உரிய வரவேற்பு அளித்தான்.

தசரதனை ரோமபதன் தன் தேரில் ஏற்றிக் கொண்டு, அரண்மனைக்குச் சென்றான். இங்கு மன்னன், சக்கரவர்த்திக்குக் கொடுக்க வேண்டிய மன்னர் மரபுக்கேற்ற நெறிமுறையும், மரியாதையும் கையாண்டமை தெரிகின்றது.

ரோமபதன் தசரதனின் வருகைக்கான காரணத்தைக் கேட்டான் தசரதன் தன் கருத்தைப் புலப்படுத்தினான் இங்குத் தசரதன் தான் வந்த காரணத்தை நேரடியாக கலைக் கோட்டு முனிவரிடம் சொல்வது

முறையல்ல என்று உணர்ந்து அம்முனிவர் வாழும் நாட்டு மன்னன் மூலமாக தெரியப்படுத்த மேற்கொண்ட செயல் அரச நெறிமுறைக்கு உட்பட்டது.

தசரதனின் கருத்தை அறிந்த ரோமபதனும் கலைக் கோட்டு முனிவரை நேரில் சென்று வணங்கி தசரத சக்கரவர்த்தி முனிவரைத் தன் நாட்டிற்கு வருமாறு அழைக்க வந்திருப்பதையும் முனிவர் அங்கு செல்ல வேண்டும் என்பதையும் பணிவோடு தெரிவித்தான். முனிவர் சம்மதத்தை அளித்தார். முனிவர் வருகையை உறுதிப்படுத்திக் கொண்டு தசரதன் கோசலத்திற்குத் திரும்பினான்.

ரோமபத மன்னனே கலைக் கோட்டு முனிவரைக் கோசல நாட்டிற்கு அழைத்துச் சென்றான். கலைக்கோட்டு முனிவர் தன் நாட்டிற்கு வந்ததும் அவரை முறையான அரசு மரியாதைகளோடு வரவேற்று முதலில் தன்குலகுரு வசிட்ட மகா முனிவருக்கு அறிமுகப்படுத்தினான். மற்ற அவையோருக்கும் உரியவாறு அறிமுகப்படுத்தி அரசவைக்கு அழைத்துச் சென்றான்.

இங்கு, வந்தவர், முனிவர் ஆதலால் தன் குலகுரு வசிட்டருக்கு முதலில் அறிமுகப்படுத்தியமை சிறந்த மரியாதை ஆகும்.

12 மாதங்கள் மகவேள்விகள் நடந்தது, முடிவில் தசரதன் வசிட்டரை வணங்கி ஆசி பெற்றான். கலைக்கோட்டு முனிவரை முறையாக அனுப்பிவைத்தான்.

மிதிலைக் காட்சிப் படலத்தில் விஸ்வாமித்திரர் இராமனை அழைத்துக் கொண்டு வந்த போது சனக மன்னன் முனிவரையும் இராம லக்குவரையும் முறையாக அழைத்துச் சென்றார்.

அரண்மனைக்குச் சென்றதும் ஜனகன் அரண்மனையில் இருந்த சதாநந்தர் என்னும் ஜனகனது குலகுரு விஸ்வாமித்திர முனிவரை முகமன்கூறி வரவேற்றார். இதில் தவமுனிவர் இருவர் செய்து கொள்ள வேண்டிய மரியாதைகள் விளங்குகின்றன.

விஸ்வாமித்திரர் சதாநந்தரிடம் இராமனது பெருமையை மிக விளக்கமாகக் கூறினார் ஜனகனிடம் இராமலக்குவர் செய்யும் வேள்வியையும் காண்பார், வில்லையும் காண்பார் என்று பின் நிகழப் போகும் பெரிய நிகழ்ச்சிகளை ரத்தினசுருக்கமாகக் குறிப்பால் புலப்படுத்தினார்.

ஜனகன் கேட்காமலேயே இராமனது குல வரலாற்றை முறையாக விளக்கினார்.

இராமன் வில்லை நாணேற்றி முறித்ததும் ஜனகன் திருமணத்திற்கு உரிய நாள் எது என்று கேட்ட போது விஸ்வாமித்திரர் அடுத்த நாளே நல்ல முகூர்த்த நாள் என்று கூறினார்.

இந்த நிகழ்ச்சி முடிந்ததும் ஜனகன் முறையாகத் தூதர்களைத் தசரதன் பால் அனுப்பி நடந்த நிகழ்ச்சிகளை அறிவித்தான்.

நமக்கு இங்கு ஒரு ஐயம் தோன்றலாம், அதாவது தசரதனைக் கேட்காமல் எப்படி விஸ்வாமித்திரர் இராமன் திருமணத்திற்கு உறுதி அளிக்கலாம் என்பது, ஆனால் தசரதன் இராம லக்குவர்களை விஸ்வாமித்திரரிடம் அடைக்கலம் கொடுக்கும் போதே தசரதன், ‘ நல் தந்தை நீ, தனித் தாயும் நீ இருவருக்கும் இயைந்த செய்க’ என்று கூறியதை நினைவு படுத்திக் கொள்ளவேண்டும்.

நல்ல செய்தியைக் கொண்டு வந்த ஜனகனின் தூதுவர்க்கு தசரதன் தக்க மரியாதையுடன் பரிசுகளுடன் அனுப்பி வைத்தான்.

கோலம் காண் படலத்தில் இராமனின் திருமணத்திற்காகத் தசரதன் எல்லா மன்னர்களுக்கும் முறையாக அழைப்பு விடுத்தான். அவர்கள் வந்ததும் விருந்தினராகிய அவர்களுக்கு உரிய மரியாதையைக் குறைவின்றிச் செய்தான். மன்னர்களின் தகுதிக்கேற்ப அந்த மரியாதைகள் இருந்தன.

தன் மகள் திருமணத்திற்கு தன் பரிவாரங்களுடன் வந்த சம்பந்தி சக்கரவர்த்தி ஆகிய தசரதனை வரவேற்க ஜனகன் எதிர் சென்று வரவேற்றான்.

தசரதனைக் கைகொடுத்து வரவேற்றதோடு இருவரும் அன்போடும், பரிவோடும் தழுவிக் கொண்டனர். ஜனகன் ஒவ்வொரு வரையும் வரிசை முறைப்படி மரியாதை செய்தான் என்றும் தசரதனும் சுற்றத்தாரையும் நண்பர்களையும் முகமன் கூறி உபசரித்ததோடு அவர்களை எல்லாம் முன்னே செல்லுமாறு விடுத்து தசரதனும், ஜனகனும் பின்னே தேரில் சென்றனர்.

இங்கு அரசர்களுக்கும் மற்றவர்க்கும் திருமணக் காலத்தில் கொடுக்கப்பட வேண்டிய மரியாதைகள் சொல்லப்பட்டுள்ளன.

ஜனகன் அரண்மனையில் விஸ்வாமித்திரர் குறிப்பிட்ட

நாளில் சீதா, ராம திருமண நிகழ்ச்சியை வசிட்டர் செய்து வைக்கின்றார்.

இங்கும் தற்காலத்திலும் பெண் வீட்டில் திருமணம் நடந்தாலும் மாப்பிள்ளை வீட்டிற்குரிய புரோகிதர்தான் தலைமையேற்று திருமணச் சடங்கு செய்ய வேண்டும் என்ற முறை தெரிவிக்கின்றது. கடிமண நிகழ்ச்சியில் - திருமண நிகழ்ச்சிகள் முறையாக நடந்தன - கிரமப்படி கூறியுள்ளான் கம்பன்.

திருமண மண்டபத்திற்கு இராமன் சகோதரர்களுடன் வந்து - முனிவர்ளையும் - தந்தையையும் முதலில் வணங்கி ஆசிபெறுகிறான். அமர்கிறான்.

பின்பு மணப்பெண் சீதையை அழைத்து வருகிறார்கள் வேதியர்களும்- நூல் அறிந்தவர்களும் சூழ - வந்து - பழைய முறைப்படி வசிட்டன் திருமணச் சடங்கிற்குரிய கிரியைகளை - செய்கிறான். மணல் பரப்பி - தடுப்பை வளர்த்து - யாககுண்டத்திற்குப் பூசனைசெய்து - மலரால் நெய் ஆகுதிசெய்கின்றான். ஓம அக்கினியைக் குவித்து எழுமாறு செய்தான். மணமக்கள் இருவரும் திருமண மண்டபத்தில் ஆசனத்தில் அமர்ந்தனர்.

ஜனகன் தாரைவார்த்துக் கொடுத்தான் -அப்பொழுது வானவரும் அந்தணர் - பெண்கள் - மன்னர்கள் - சகலவாத்தியத்துடன் பூமழை சொரிந்து வாழ்த்தினர்.

பின்பு இராமன் சீதையின் கரம்பற்றிக் கொண்டு ஓமக்குண்டத்தை மும்முறை வலம்வந்து - சீதையின் கைகளைப் பற்றிக் கொண்டு - நெய்யுடன் கூடிய அவிஉணவினை மூன்று முறை சொரிந்தான். பின்பு பொரியிடுதலையும் இராமன் செய்து- அம்மிமிதித்து - அருந்ததி கண்டனர். மணமக்கள் இருவரும் முதலில் கைகேயியை வணங்கினர் பின்பு கோசலையையும் - சுமித்திரையையும் வணங்கினர் - மாமியார் சீதையை ஆசிகூறிப் பொன்னும் - அருங்கலண்களையும் பரிசுப்பொருட்களாக அளித்தனர். பின்பு வசிட்டன் திருமணச் சடங்கின் நிறைவாக ருக் வேதவிதிப்படி ஓம அக்னியில் பூர்ணாகுதி செய்தான்.

திருமண நிகழ்ச்சிகள் யாவும் முறைதவறாமல் செய்ததைக் கம்பன் விடாமல் பாடலில் காட்டியுள்ளான். இருப்பினும் இராமன் சீதைக்கு மாங்கல்யதாரணம் செய்த நிகழ்ச்சியைப் பாடவில்லை -

இதனை நூல் வல்லுநர்கள் ஆய்ந்து கூறுவார்களாக.

தசரதன் ஆட்சிப் பொறுப்பை இராமனுக்கு அளிக்க வேண்டும் என்று எண்ணிய போது, தானே தன்னிச்சையாக முடிவு எடுக்காமல் சக்கரவர்த்தியாக இருந்தும் குடியாட்சி முறையோடு செய்ய நினைத்த தசரதன் மந்திரிகளை அழைத்துத் தன் கருத்தை அவர்களிடம் தெரிவித்து அறிய வேண்டும் என்று விரும்பி தன் கருத்தை அமைச்சர்களுக்கு உரைத்தான்.

பிற மன்னர்களுக்கும் ஓலை அனுப்பினார். எல்லோரும் வந்த பின்பும் அவர்கள் இராமனுக்குப் பட்டம் சூட்டுவதை மன மகிழ்வோடு ஏற்றுக் கொண்டதைத் தெரிவித்தனர். அப்போதும் தசரதன் அவர்களிடம் 'மனமகிழ்ச்சியோடும் தன் கருத்தைத் தெரிந்து கொண்டதற்காகவும் மட்டுமே சம்மதம் அளித்தீர்களா! உங்கள் ஒப்புதலின் காரணம்யாது' என்று வெளிப்படையாகவே கேட்டான். இதன் பின்பும் மன்னவர்களும், மற்றவர்களும் தங்கள் உண்மை விருப்பத்தைத் தெளிவு படுத்திய பின் தசரதன், 'இராமன் என் மகன் என்பது ஓரின் இங்கு இவன் நும் மகன், கையடை' என்று தன் மனம் திறந்த உண்மையை வெளிப்படுத்தினார். இதனால் சக்கரவர்த்தியாகிய அவனுக்குப்பிற மன்னர்களுக்கும் இடையே இருந்த வெளிப்படையான தன்மை புலப்படுகின்றது.

குகன் இராமனைச் சந்தித்த முறை, ஒரு சிற்றரசன் அல்லது ஒரு பகுதியின் தலைவன் ஒரு பெரு மன்னனைச் சந்திக்கின்ற போது கொள்ள வேண்டிய முறையில் உயர்ந்த காணிக்கையாகிய தேனையும் - மீனையும் அன்பின் அறிகுறியாகக் கொண்டு வந்த செய்தி கம்பனால் காட்டப்பட்டுள்ளது. அதுவே பின்பு சகோதரத்துவமாக மாறியது. இதில் தமிழ்ப் பண்பாடு வெளிப்படுகின்றது.

இறந்த தசரதனது உடலைச் சிறந்த விமானத்தில் (சப்பரம்) வைத்து யானைமேல் ஏற்றி எடுத்துச் சென்றனர். இந்த நிகழ்ச்சி இப்பொழுதும் ஒரு நாட்டின் ஜனாதிபதியோ, பிரதமமந்திரியோ அல்லது இந்த வரிசையில் உள்ளவர்களோ இறந்து போனால் அவர்களது உடல் உயர்ந்த இராணுவ ஊர்தியில் உயரமாக வைத்து ஊர்வலமாகச் சென்று எல்லோரும் பார்க்கும் படியாக அமைத்து இறுதி ஊர்வலம் மேற்கொள்ளப்படுவதைக் காண்கின்றோம். (Last Journey)

பரதன் பாட்டன் வீட்டிலிருந்து அயோத்தி திரும்பினான் நடந்ததை எல்லாம் அறிந்தான். இந்த நேரத்தில் தசரதனின் தலைமை அமைச்சன் சுமித்திரன் என்பவன் - நாட்டு ஆட்சியைப் பரதன் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று சொல்ல வேண்டிய செய்தியை அந்தச் சூழ்நிலையில்தான் நேரடியாகப் பரதனுக்குச் சொல்ல முடியாமல், குருவாகிய வசிட்டர் வாயிலாகச் சொல்ல விரும்பினான். அதையும் வார்த்தையாய் சொல்லாமல் தன் உளக்கருத்தைக் முகக்குறிப்பால் ஜாடையாக உணர்த்தினான். இதை அறிந்த வசிட்டன் பரதனிடம் ஆட்சியை ஏற்றுக் கொள்ளும் படி அறிவித்தான்.

இங்கு ஒரு அமைச்சன் சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கு ஏற்ப எப்படிப் புத்தி கூர்மையுடன் - நாகரீகமாகச் செயப்பட வேண்டும் என்ற செய்தியைக் கம்பன் வரிகள் காட்டுகின்றன.

அனுமன் - இராமன் இலக்குவனுடன் - வனத்திற்குள் வருவதைக் காண்கின்றான் அவர்களது தோற்றப் பொலிவையும் - எதையோ தேடிவருவதையும் தன்மதிநுட்பத்தால் உணர்ந்தான். இந்த சமயத்தில் தானும் தன் உண்மையான குரங்குவடிவத்தோடு சென்று நின்றால் - மேலும் அவர்களுக்குக் குழப்பம் நேரிடலாம் என்று உணர்ந்தவனாகையால் மானுடம் வடிவம் கொண்டு - உரையாடுகின்றான்.

அனுமனின் பேச்சில் இருந்த - தெளிவும் - பண்பும் - அடக்கமும் - இராமனை வெகுவாக மகிழ்வித்தது. அவனே இலக்குவனிடம், 'யார்கொல் இச்சொல்லின் செல்வன்' என்று கேட்டான். இது மிக உயர்ந்தவர்களைச் சந்திக்கும் போது எப்படி நாகரிகமாகப் பேச வேண்டும் - என்ற அணுகு முறை மரியாதைப் பண்பைப் புலப்படுத்தும். அனுமன் வாயிலாக இராமனைச் சுக்கிரீவன் காணச்செல்கிறான். இராமனின் தோற்றம் மானுடம் வென்றதற்குச் சாட்சியாகும் என்று வியந்து வரவேற்கவும் மறந்து நின்ற போது இராமனே அவனைத் தன்கைநீட்டி அழைத்து - 'வந்து இனிமையாக' அமர்க என்று உபசரித்தான்.

இங்கு தன்னிடம் - வந்திருப்பவன் இராமன் - வரவேற்க வேண்டியது சுக்கிரீவன் கடமை. ஆனால் அவன் வரவேற்பதற்குள் இராமன் வரவேற்றது ஏன் என்று சிந்தித்தால், இராமன்

எல்லாவகையிலும் உயர்ந்திருந்தாலும் - சுக்கிரீவனிடம் உதவிபெறுவதற்காகத்தான் - தான் வந்திருப்பதால் சுக்கிரீவனை முதலில் தானே வரவேற்றான். ஏனென்றால் தேவை இராமனுக்குத்தானே. அதுமட்டுமல்லாமல் சுக்கிரீவன் மன்னனல்லவா? ஒரு அரசனை வரவேற்பதும் வந்தவருக்கும் முறையல்லவா? கடமையல்லவா? ஆதலால் அந்த முறை மாறாமல் - கெடாமல் இராமன் வரவேற்றான் என்று நாம் கருதுமாறு கம்பன் வைத்துள்ளான்.

சுக்கிரீவனின் நிலையைக் கேட்ட இராமன் அவனது துன்பத்தை முதலில் நீக்கி வைத்த பின்பு - தனது காரியத்தை முடித்துக் கொள்ளலாம் என்று இரு அரசர் ஒப்பந்ததம் செய்து கொள்வதுபோல இராமன் முடிவு எடுத்தது தற்காலத்தில் நடப்பதைப் பற்றி நம்மைச் சிந்திக்க வைக்கின்றது. இப்போதும் இரு நாடுகள் ஒப்பந்தம் செய்து கொள்ளும் போது இதை நாங்கள் தருகிறோம் இதற்கு ஈடாக நீங்கள் இன்னொன்றை எங்கள் நாட்டிற்கு நீங்கள் தாருங்கள் என்று உறுதிமொழிக் கடிதங்களைப் பரிமாறிக்கொள்வதைச் செய்திகளில் - பார்க்கிறோம் - படிக்கின்றோம். தன் படைபலத்தைக் காட்டச் சுக்கிரீவன் - தன் வானரசையின்னியத்தைக் காட்டுகின்றான். இதில் அறியதோர் அரச முறை - நடைமுறை கடைப்பிடிக்கப்பட்டுள்ளது. இராமன் ஒரு மேட்டுப் பகுதியில் இருக்கின்றான். வானரப் படை வடக்கிலிருந்து தெற்கு நோக்கி வருகின்றது. ஒவ்வொரு படைக்கும் முன்பு தளபதிகள் வருகின்றனர். சுக்கிரீவன் முதலில் அவர்களை அறிமுகப்படுத்திய பின்பு - படைகள் அணி அணியாக வருவதைப் போலக் கம்பன் தீட்டியுள்ளான்.

படைகளும், தளபதிகளும் அணியில் செல்லுகின்ற போது இராமன் அருகில் வந்ததும் அவனைப் பார்த்த வண்ணம் சென்றிருக்க வேண்டும். இந்தக் காட்சியைக் கற்பனை செய்துகொள்வோம். தற்காலத்திற்கு வருவோம். அரசு நிகழ்ச்சிகளில் ராணுவ அணிவகுப்பும் மரியாதையும் முக்கியமானவர்க்கு அளிக்கப்படுகிறது. என்ன நடைமுறை?

முக்கிய விருந்தினர் ஒரு மேடையின் மீதோ - அல்லது இராணுவ வண்டியிலோ நின்றிருப்பார் படைகள் வடக்குப் பகுதியிலிருந்து தெற்கு நோக்கி வரும் - தளபதி கேப்டன் - அல்லது கமாண்டர் முதலில் தனித்து வருவார் விருந்தினர் அருகில் வந்ததும் வலது பக்கம் முகத்தைத் திருப்பி சல்யூட் அடித்தவாறே நகர்ந்துகொண்டிருப்பார் - வீரர்களும் அவ்வாறே செய்து வருவர். இக்காட்சியை அப்படியே கம்பன் தன் பாடல்களில் கொண்டுவந்துள்ளான் -இதுவும் அரசாங்க அணிவகுப்பு மரபாகும். தற்போதுள்ள ஆடம்பர உடைகளும் - போர்க்கருவிகளுடனும் வானரங்கள் வரவில்லை என்றாலும் - இராணுவ ஒழுங்குமுறை - குறைவின்றிக் கடைபிடிக்கப்பட்டுள்ளதைக் காணுகிறோம்.

கடலைதாவியாயிற்று - இலங்கையிலும் - இறங்கியாயிற்று ஊர் தேடு படலமும் முடிந்து சீதையைக் கண்டனன் அனுமன். அசோகவனத்தில் துயரமே உருவங்கொண்டிருந்த சீதை தன்னுயிரைப் போக்கிக் கொள்ளும் தருணத்தில் அனுமன் அவள் முன்பு தோன்றுகின்றான். அவளது செயல் தடைபடுகின்றது.

இவனைக் கண்டதும் அவளுக்குச் சந்தேகம் - அரக்கனோ எவனோ என்னும் ஐயம்.

அவளுக்குத் தான் இராமனின் தூதன் என்பதை நிரூபிக்க வேண்டும் - என்ன செய்வது - இராமன் தந்த அடையாள மோதிரம் உதவிக்கு வருகிறது. மோதிரத்தைத் தன் வலக்கையில் வைத்துக் கொண்டு சீதையிடம் நீட்டினான் என்றான் கம்பன். மரியாதை வெளிப்படுகிறது. உயர்ந்தவர்க்கு ஒரு பொருளை அளிக்கும் போது அவர்களது கைகள் மேலேயும் தருபவரது கை கீழேயும் இருக்க வேண்டும் என்பது பெரியவர் சிறியவர்க்கு இடையே ஏற்பட்ட வழக்கமானதொரு மரியாதைச் செயல்.

நீட்டிய கரத்திலிருந்து சீதை மோதிரத்தை எடுத்துக் கொண்டாள். பண்பாடும் - மரியாதையும் புரிகின்றதல்லவா?

அடுத்து வருவதைப் பார்ப்போம் - சீதையைத்தான் அனுமன் கண்டு வந்தான் என்பதை இராமனுக்கு எப்படி நிரூபிப்பது? இதோ சீதை தன் ஆடையில் சுற்றி வைத்திருந்த சூடாமணியை அனுமனிடம் தர வருகின்றாள் மரியாதையும் - பண்பாடும்

வெளிப்படுகின்றது. சூடாமணியைத் தருகின்ற சீதையின் கை மேலும் அதை வாங்கும் அனுமன் கை கீழேயும் இருக்கின்றது. இக்காட்சி கம்பனின் பாடலில் தொணிக்கின்றது. அதையும் தொழுது வணங்கினான் என்றான் கம்பன்.

வீடணன் இராவணனிடமிருந்து உயிர்ப்பிழைத்து ஓடிவருகிறான். அவனுடன் மற்ற இருவர் வேறு- ஆகாய வெளியில் நிற்கின்றானாம். வந்தவன் வீடணன் - அடைக்கலத்திற்கு - இப்பக்கம் சேர்வதற்காக வந்திருப்பதும் தெரிகின்றது. இவனை இராமன் தன்னிச்சையாக - எவரையும் கலந்தாலோசிக்காமல் சேர்த்துக் கொள்ளவிரும்ப வில்லை, அதைச் செய்திருந்தாலும் யாரும் ஏன் என்று கேட்கப்போவது இல்லை. இருப்பினும் இராமனது உயர்ந்த உள்ளம் தனக்கு உதவுபவர்களை - பிறரைமதிக்க வேண்டும் என்ற அருங்குணம் அவன் இப்படிச் செய்தான். இலக்குவன்- சுக்கிரீவன் உட்பட எல்லோருடைய கருத்தையும் கேட்டான் - எவரும் வீடணனை ஏற்றுக்கொள்ள சம்மதித்தார்கள் இல்லை. அது மட்டும் அல்ல - அண்ணனைக் கொல்லவும் உதவிநாடி வந்தவன் என்று கூட இகழ்ந்தனர்.

பொறுமைகாத்தான் - இராமன்- ஒன்றும் பேசாது மௌனியாக நின்ற அனுமன் பக்கம் இராமன் பார்வை சென்றது. அவனது கருத்தைக் கேட்டான் - காரணம் இலங்கைக்குச் சென்றுவந்தவன் - அவன் அல்லவா? இராமனை விட இலங்கையின் தன்மைகளை நேரில் கண்டவன் அவனல்லவா?

வீடணன் இல்லத்தின் தோற்றம் - கருப்பு நிறத்தில் தருமம் ஒளிந்துவாழ்வது போன்றது அவன் தன்மை - அவனது மகள் திரிசடைதான் சீதைக்குப் பக்கத்துணை என்பதையெல்லாம் எடுத்துக்கூற அதை ஏற்றுக் கொண்டு சுக்கிரீவனை அனுப்பி அழைத்துவருமாறு செய்தான் - எத்தகைய பரந்த உள்ளம்.

ஒரு மன்னன் முக்கியமான ஒன்றைத் தீர்மானிப்பதில் அனுபவப் பட்டவரின் ஆலோசனையை ஏற்றுக் கொள்ள வேண்டும். என்ற அரசியல் நெறிமுறை காட்டப்பட்டுள்ளது. தற்காலத்தில் இம்முறைகள் அரசியலில் கடைபிடிக்கப்பட்டால் - பலபிரச்சனைகள் தோன்றுவதற்கே வழியிருக்காது - இது நடக்குமா?

இலங்கைக்குச் செல்ல சேதுபந்தனம் கட்டவேண்டும் - கடலில் செய்ய வேண்டிய கட்டுமானப்பணி இராமன் செய்திருக்க முடியாதா? வருணனுக்காகத்தான் - கடலின் அரசன் அவனல்லவா? அவனிடம் அனுமதி பெற வேண்டுமல்லவா? அதற்காகக் காத்திருந்தான் இராமன். தனக்குப் பேராற்றல் உண்டு - தான் செய்வதையாரும் கேட்கமாட்டார் - கேட்கவும் முடியாது என்ற உயர்ந்தநிலை. இருப்பினும் - ஒருவனுக்கு உரிய இடத்தில் ஒருவனது அதிகார வரம்பிற்குள் இருக்கும் இடத்தில் அவனது அனுமதியின்றிக் கால்வைப்பது - தவறு அல்லவா? முறையான அனுமதி பெற்றான். உரியதைச் செய்தான். எனவே வருணனின் அனுமதிக்காகக் காத்திருந்த இராமனின் அரசதர்மத்தைக் கம்பன் படம்பிடித்துக் காட்டுகின்றான்.

யுத்த காண்டத்தில் காணும் போது இராவணன் எவர் சொல்லையும் கேட்காத ஆணவ மனப்பான்மை கொண்டவன் என்று இருந்தும் அவனும் ஆலோசனை செய்தான், மற்றவர்கள் கூறுவதையும் கேட்டான். ஆக அவனுக்கும் அரச முறைகள் கடைபிடிக்கப் பட வேண்டும் என்ற நியதிகள் தெரிந்திருந்தன. கேட்டானே அன்றி அவர்கள் சொன்ன வழியில் நடக்க வில்லை என்பது வேறு.

இராமனுக்குத் திருமுடி சூட்டிய நிகழ்ச்சியில் ( பட்டாபிஷேக நிகழ்ச்சியில்) அரியணை அனுமன் தாங்க- அங்கதன் உடைவாள் ஏந்த- பரதன் வெண்கொற்றக்குடை பிடிக்க- இலக்குவன் - சத்துருக்கினன் கவரி வீச - சடையப்ப வள்ளலின் மரபினர் - கிரீடத்தை எடுத்துக் கொடுக்க - வசிட்டன் மந்திரங்கள் கூறி முடிபுனைந்தான் என்று மக்களுக்கும் - முனிவனுக்கும் சிறப்பு ஏற்படுமாறு பாடியிருப்பது - கம்பனின் முறை தெரிந்த அறிவைக் காட்டும்.

பட்டாபிஷேகம் எல்லாம் முடிந்து எல்லோருக்கும் விடைகொடுத்து அனுப்பியபோது. இராமன் - சுக்கிரீவனது படைத்தளபதிகளையும் - எழுபது கோடி வீரர்களுக்கும் அவர்கள் செய்த உதவிக்கு நன்றி செய்யும் முறையில் சந்திக்கின்றான்.

சுக்கிரீவன் - வீடணன் - குகன் - எல்லோரும் வணங்குகின்றனர்.

இராமன் அவர்களின் மீது இருந்த அன்பும் - பரிவும் - முகத்தில் வெளிப்படுமாறு - அனைவரையும் தழுவிக் கொண்டது போன்ற உணர்வோடு மனமகிழ்ந்து - குறையாத அன்புக்குரியவர்களோட இனிமையாக அமருங்கள் என்று உபசரித்தான். இவர்கள் மட்டுமின்றி வேதவித்தகர்கள் - புலவர்கள் - பலகலை அறிந்தவர்கள் - மன்னவர்கள் - அயோத்தியர்கள் அனைவரையும் அன்போடும் கண்டுபேசி அன்புசெய்தான். எல்லோருக்கும் நினைவுப் பரிசுகள் வழங்கினான். இராமன் தனக்கு உதவிய அனைத்துப் பேருக்கும் அன்பாக விடையளித்தும் தகுதிக்குத்தக்கவாறு அன்புப் பரிசளித்தும் பெரியகாரியத்தை வெற்றிகரமாகச் செய்துமுடிப்பதில் உதவிய அனைத்துப் பேருக்கும் - தற்காலத்திலும் - கடைசியில் நன்றி சொல்லுவதைப் போல நடைமுறை உள்ளதை தெளிவு படுத்துகின்றது.

இவ்வகையில் இராமாயணம் முழுவதையும் பார்க்கும்போது தனி வாழ்விலும் அரசாங்க முறையிலும் என்னென்ன முறைகள் கடைப்பிடிக்கப்படவேண்டும் என்ற உண்மைகளை யெல்லாம், எல்லாம் அறிந்திருந்த கம்பன் காவியத்தின் நிகழ்ச்சிகளில் நமக்கு வெளிபடுத்தி உள்ளான். அவன் கவிச் சக்கரவர்த்தி!



## காண்டங்களின் நாயகர்களும் காவிய நாயகனும்

கோ. செல்வம். எம்.ஏ.,
சென்னை வானொலி முன்னாள் இயக்குநர்

இராமயணம் ஆறு காண்டங்கள் கொண்டது. இராமாயணக் காவியம் முழுவதற்கும் இராமனே தலைவன். ஆனாலும் ஒவ்வொரு காண்டத்துக்கும், அவரவர் செய்த வீரதீரச் செயல்களாலும், தம்மை யார் என்று வெளிக்காட்டிய விதத்தாலும், தியாகப் பண்பாலும், உறுதிப்பாட்டாலும், உயர்ந்து நின்றும், அவ்வக்காண்டத்துக்கும் தலைவன் ஒருவன் உண்டு என்று கற்றோர் உலகம் நெடுநாட்களாகச் சொல்லி வரும் மரபு உள்ளது. ஒவ்வொரு காண்டத்துக்கும் உரிய தலைவன் யார்? அத்தலைவனாகும் தகுதிக்குரிய பண்பு நலன்கள் என்ன? ஒரு பருந்துப்பார்வை பார்ப்போம்.

இராமாயணம் வீரகாவியம். தொண்டின் சிறப்பைச் செப்பும் காவியம், அடைக்கலம் என்னும் அரிய பண்பு கூறும் காவியம். பொறுமையால் கற்பு காத்த புனிதச் சீதையின் காவியம். வீரத்தாலும் விவேகத்தாலும் பலர் உலாவந்த காவியம்.

இவற்றுள் முதல் காண்டமாகிய பாலகாண்டத் தலைவன் துனிஉறு முனிவன் எனப் புகழப்பெற்ற விசுவாமித்திரன். அம்முனிவன் ஆற்றல் அளப்பரியது.

*அடங்கலும், உலகம் வேறு அமைத்து, தேவரோடு*
*இடம்கொள் நான்முகனையும் படைப்பென், ஈண்டு எனாத்*
*தொடங்கிய துனிஉறு முனிவன் தோன்றினான் ( 317)*

என்பார் கம்பர். இராமனது வில் ஆற்றலை வெளிப்படுத்த வந்தவர் விசுவாமித்திரன். தயரதனின் விருப்பு கேளாது இராமனை வெளி உலகிற்கு அறிமுகப்படுத்துகிறார். அவன் தோள் ஆற்றலால் தாடகையை வதம்புரியச் செய்தார். இனிவர இருக்கும் போர்களில் இராமன் திறமையுடன் பொருது வெல்ல அரிய அஸ்திர, சஸ்திரங்கள் கற்றுத்தந்தார். சதானந்த முனிவர்க்கும், சனகன் முதலிய அரசர்க்கும் அவனை அறிமுகம் செய்வித்து, சிவதனுசுவை முறித்துச் சீதையை மணம் கொளவைத்தார். வீர ஆவேச அவதாரமான பரசுராமனின் ஆணவம் அடங்க அவர் வைத்திருந்த திருமால் வில்லை இராமன் முறிக்க விசுவாமித்திரர் கற்றுத் தந்த வித்தைகள் துணை நின்றன. இராமனை ஏற்றமுடன் அறிமுகப்படுத்தியவர், துனிஉறு, முனிவன்

விசுவாமித்திரர். இவ்விஸ்வாமித்திர முனிவர் தலைசிறந்த தவம் ஏற்றியவர். ஏற்றிய தவஆற்றல் எவ்வாறு சிதையக்கூடாது என்பதற்கு விசுவாமித்திரர் எடுத்துக்காட்டு. வசிட்டரிடம் போட்டியிட்டுச் சென்ற விசுவாமித்திரர் கடுந்தவம் மேற்கொண்டார். திலோத்தமையை இந்திரன் அனுப்ப, மயங்கினார். காமத்தால் அவர்தவம் கலைந்தது பின்னர் தென்திசை சென்று தவஆற்றல் ஈட்டினார். திரிசங்குவை வானத்திலிருந்து தேவர் தள்ளியதால் கொண்ட சினத்தால் தவஆற்றல் இழந்தார். வடதிசை சென்று தவம்செய்து பேராற்றல் பெற்றார். பின்னர் சுனச்சேனனுக்கு உதவி தவம் குறைந்தது.

பின்னர் தென்திசை ஏற்றிப் பிரம்மரிஷி என தேவராலும் பிற முனிவராலும் சிறப்பிக்கப்பெற்றார்.

முயன்றே தவம் ஈட்டப்படும் என்பதற்கு இலக்கணமானவர் விசுவாமித்திரர். அவர் இராம இலக்குவருக்கு அரிய மந்திரங்கள் போதித்தார். தவத்தால் உயர்ந்து விளங்கிய விசுவாமித்திரர் ஜனக மன்னன் சபையில் விளங்கிய சதானந்த முனிவரால் இராம இலக்குவர்க்குச் சுட்டிக் காட்டப்பெறுகிறார். காவிய நாயகனுக்கு முதற்காண்ட நாயகன் அறிமுகம் ஆவது காணலாம்.

அடுத்து அயோத்தியா காண்டத் தலைவனாக விளங்குபவன் பாதுகை பெற்ற தம்பி பங்கம் இல் பரதன். பங்கம் இல் குணத்து எம்பி பரதனே என்று அழுத்தம் திருத்தமாக இராமனே கோசலையிடம் கூறுகிறான்.

மௌலி புனையாது, புனல் நீர் ஆடாது வந்தது கண்ட கோசலை இராமனிடம், 'இடையூறு உண்டோ நெடுமுடி புனைதற்கு?' என்று கேட்டதும், இராமன் பரதனின் தியாக உணர்வையும், ஒப்பற்ற பண்பு நலனையும் தெரிவித்து, நின் காதல் திருமகன் பரதன் பங்கம் இல் குணத்து எம்பி என்றான்.

பரதன் பங்கம் இல் குணத்தவன். கைகேயியிடம் மாறுபட்டு வெளிவந்து தன்னை வணங்கிய பரதனைக் கண்ட கோசலை அவன் குற்றம் உற்றவனோ என ஐயுற்றாள். எனினும், அவள் 'மாசு உளான் அலன், செய்யனே! ' என்று நேர்ந்தாள். ஒரு கேள்வி கேட்டாள். 'கைகயர் கோமகள் இழைத்த கைதவம் ஐய! நீ அறிந்திலை போலுமால் ' என்றாள். கைகேயி என்று தன் தாயின் பெயர் கூறாது தன் தாயைக் கைகயர் கோமகள் இழைத்த கைதவம் என்று கோசலை

குறிப்பிட்டதை நினைந்து உளம் நைந்தான். மனம் புண்உற்ற கோசலையின் கேள்வியால் மனம் புண்பெற்ற பரதன் குமுறி விம்மிச் சூளுறு கட்டுரை சொன்னான். தான் பழிகாரனாயின் பல பாவங்களைச் செய்தவன் ஆவேன் என்று அரற்றினான். உயர்ந்த பங்கம் இல் பண்பினன் பரதன் அத்துடன் குகனைக் காணச் சென்று அவனாலும் முதலில் ஐயுறப்பட்டு அவனாலே வணங்கப் பெற்ற பதமுற்ற பண்பினன்.

வற்கலையில் உடையான்,மாசு அடைந்த மெய்யான், நகை இழந்தை முகத்தான், கல் கனியக் கனிகின்ற துயரான் ஆகிய இவனைக் கண்ணுற்ற குகன், தன் கையினின்றும் வில்விழ விம்முற்றான். வந்து எதிரே தொழுதானைக் குகன் வணங்கினான். பின்னர், "ஆயிரம் இராமர் நின் கீழ் ஆவரோ தெரியின் அம்மா!" என்று பரதனை இராமனினும் புகழ்ந்தான்.

இராமனைச் சித்திரகூட மலையில் கண்ட பரதன், தனக்குத் தாய் தந்த அரசை அண்ணனுக்கு அளிக்க, அவன் மறுத்தான். அவன் ஏற்க வேண்டி பலவாறு மன்றாடுகிறான் பரதன். இராமனது பிடிவாதத்தால் இரங்கிய பரதன் இராமனுடைய பாதுகையை ஏந்திச் சென்றான். பதினான்கு ஆண்டுகளும் நந்தியம்பதியில் இருந்தபடி இராம இராச்சியம் செய்தவன் பரதன். அவன் மாசு மறுவற்றவன்.

பதினான்கு ஆண்டுகள் கழித்து இராமன் வாராமையால் தீப்புக எண்ணித் தீயும் வளர்க்க ஏற்பாடு செய்தது பரதனது இராமபக்தியையும் தன்சொல்லின் உறுதிப் பாட்டையும் உணர்த்துவ தாயிற்று. எனவே அவன் பங்கம் இல்லாதவன். அவனே தன் உயர்குணத்தால் அயோத்தியா காண்டத் தலைவனும் ஆவான்.

மூன்றாவதான ஆரணிய காண்டத்துத் தலைவன் சடாயு. இந்த ஒரு காண்டத்திலேயே சடாயு காண்படலம் என்றும் சடாயு உயிர் நீத்த படலம் என்றும் இருபடலங்களால் பாடப்பெற்ற பெருமை வாய்ந்தவர் சடாயு என்பவரேயாவார். அகத்தியரின் சொல்கேட்ட இராம இலக்குவ சீதை மூவரும் பஞ்சவடி சேர்ந்தனர். கழுகரசன் சடாயுவைக் கண்டு தம் தந்தை தயரதனின் உற்ற நண்பர் அவர் என்பதறிந்தனர். அருணனின் குமாரனும் சம்பாதியின் தம்பியுமாகிய சடாயு காட்டில் அவர்களுக்குச் சிலநாள் துணையாக இருந்தார்.

பின்னர் இராமன் தன் தம்பி இலக்குவனோடும் மனைவி சீதையோடும் புறப்பட்டான். இராவணன் சீதையை வஞ்சகத்தால்

கவர்ந்து சென்றதைச் சடாயு கண்டார். இராவணனுடன் போரிட்டார். இராவணனது முடியைப் பறித்தார் அவனது கொடியை அறுத்தார், தேரில் குதிரைகளைச் சாய்த்தார். வீரப்போர் புரிந்தார். இராவணனுடன் சடாயு நிகழ்த்திய போரை வால்மீகி அற்புதயுத்தம் எனப் புகழ்கிறார். சங்கரன் கொடுத்த சந்திரகாசம் என்னும் வாளால் சடாயுவின் சிறகுகளை இராவணன் துண்டிக்க அவர் தரையில் விழுந்தார்.

இராம இலக்குவர் அவ்வழி வரும்வரை உயிர்காத்திருந்து இராவணன் சீதையைக் கவர்ந்து தென் திசை சென்ற செய்தியைச் சொன்ன பெருமைக்கு உரியவர் சடாயு. சீதையை மீட்கும் போரில் தம் உயிரை ஈந்த புகழுக்குரியவர் அவர். இவரது சிறகுகளை இராமன் தடவி அவருக்கு வைகுந்தப் பதவி தந்தார். தன் உயிர் புகழ்க்கு விற்ற பேராளர் சடாயு.

எனவே தன் நண்பர் தயரதனின் மருகியாள் சீதையைக் காக்கத் தன் உயிர் ஈன்ற புகழாளர் சடாயு. அவரே ஆரணிய காண்டத் தலைவன்.

அடுத்த நான்காம் காண்டத்தின் தலைவன் வாலி. புள்ளினத்தின் தலைவனை முன்காண்டத் தலைவனாக்கிய இராமாயண ஆசிரியர் இந்த கிட்கிந்தா காண்டத்தில் வானரத்தின் அரசனான வாலியைத் தலைவன் ஆக்கினார்.

வாலி ஈடு இணையற்ற வீரன். பாற்கடலைத் தன் இரு கைகளால் கடைந்தவன். இராவணனை வாலில் கட்டி எட்டுதிக்குகளும் சென்றவன். அட்ட மூர்த்தி சிவனின் தாள் பணிபவன். இராமபாணத்தின் செயலைத் தடுத்து நிறுத்தும் ஆற்றலன். வாலியின் வீரம் மிக்க வரலாற்றை அனுமன் சொல்லக் கேட்டவன் இராமன்.

இராவண வதத்துக்குத் தடையாக நின்றவன் வாலி. எனவே அவனை மறைந்திருந்து கொல்ல முடிவு செய்தான் இராமன்.

இராமன் மறைந்திருந்து அம்பு எய்ய அது வாலியின் மார்பைத் துளைத்து நின்றது. அதனை வாலி வலிகொண்டு இழுக்க அதில் செம்மைசேர் இராம நாமம் அவன் கண்களில் தெரிந்தது. அது அவன் பெற்ற நயன தீட்சை. பின்னர் மண்உற்று வரிவில் ஏந்தி வருகின்ற இராமவடிவத்தைத் தரிசித்தான் வாலிக்கு இறையனுபவம் கிடைத்து விட்டது. ஆவிபோகின்ற வேளையில் இராமனது வாளியால் அறிவு

பெற்றவனானான் வாலி. 'மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ! பாவம் நீ! தருமம் நீ! பகையும் நீ! உறவும் நீ! ' என்று பரம் பொருளைப் பாடி உய்வு பெற்றவன் வாலி. வீட்டரசு எனக்கு நல்கினான் எம்பி என்று சுக்கிரீவனிடம் அந்த அனுபவம் சொன்னான்.

அந்த நயனதீட்சை பெற்ற பின்னும் இராமனை வில்லறம் துறந்தவன் என்று நேருக்கு நேர்கூறும் ஆண்மை படைத்தவன் அவன். அடுத்து இலக்குவன் கூறிய விடைச் சொற்களால் மனநிறைவு பெறுகிறான். தன்மகன் அங்கதனை இராமனிடம் அடைக்கலமாக ஒப்படைக்கிறான்.

உலகமகா காப்பியங்களில் காணப்பெறாத ஒப்பற்ற ஒரு தலைவனை அவன் முரண்பட்ட செயல் செய்தவனாயினும் முடிவில் மூலப் பொருளைக் கண்டு உய்ந்ததனால் அவனைக் கிட்கிந்தைக் காண்டத்திற்குத் தலைவனாக்கினார் இராமாயண ஆசிரியர்.

அடுத்து ஐந்தாவதான சுந்தர காண்டத் தலைவன் அனுமனே. அவனே சுந்தரன் எனப் பெயர் கொண்டவன். காவியம் முழுவதற்கும் தலைவனாகி விளங்கும் இராமனான சுந்தரனின் புகழையும் செம்மையையும் சௌந்தர்யத்தையும் சீதையிடமும் இராவணனிடமும் கூறும் சிறப்பு பெற்றவன்.

அனுமனின் பெருமையைக் கம்பர் செவிக்குத் தேன் என இராமன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன் ( 4966) என்று குறிப்பிடுவார். அனுமன் தன்னலம் கருதாத் தொண்டன் பிறர் பொருட்டாகவே தொண்டுகள் செய்த பெருமையன். கைம்மாறு கருதாமல் தொண்டு செய்து இராமன் பரம் பொருள் என உணர்ந்து மகிழ்ந்தவன். சிறந்த கல்வியாளன். அவனிடம் இராமனுக்கு உரிய நற்பண்புகள் அனைத்தும் குடிகொண்டிருந்தன.

அவன் இராமநாமம் செபித்துக் கடலைத் தாண்டிய பேராளன். இராம நாமத்தைச் சொல்லி உயிர்விடத் துணிந்திருந்த சீதையைக் காத்த அண்ணல். இராவணனைக் கண்டு அஞ்சாது இராமனது பெருமை உணர்த்திய வீரன், சீதையைக் கண்டு இராமனுக்கு ஆறுதல் செய்தி சொன்ன அரும்தூதன்.

இலங்கையில் அவன் வாலில் இராவணன் இட்ட தீயினால் இராமனுக்காகவும், சீதைக்காகவும் பல விழுப்புண்களை ஏற்ற தியாகி. அவன் சொல்லின் செல்வன். அவன் கல்லாத கலையும்

வேதக்கடலுமே இல்லை என இராமனால் புகழப் பெற்றவன். நூற்பெருங்கடல் நுனித்து உணர் கேள்வியான். வன்திறல் மாருதி பழி இல்லாதவன். தருமத்தின் தனிமை தீர்ப்பான்.

மொத்தத்தில் தொண்டு என்ற சொல்லின் முழு வடிவாகக் கம்பன் அனுமனைப் படைத்துள்ளான். எனவே அனுமனே சுந்தர காண்டத்தின் தலைவன்.

ஆறாவது யுத்த காண்டத்தின் தலைவன் இராவணனாகிறான். அவன் எதிர்மறை நாயகன் ஆயிற்றே. அவன் எப்படிக் காண்டத்தின் நாயகன் ஆகமுடியும்! இராமசரித்திரத்திற்கு வான்மீகி சூட்டிய மூன்று பெயர்களில் ஒன்று இராமாயணம், இரண்டாவது சீதாசரிதம். மூன்றாவது பௌலஸ்யவதம். புலஸ்திய முனிவரின் மகன் இராவணன். பௌலஸ்தியன் இராவணன். இவனுடைய வதமே காவியத்தின் முக்கியப் பயன். அதனால் அவனை யுத்த காண்டத்தின் நாயகனாகக் கூறலாம்.

அறத்தை நிலை நிறுத்தத் தீயவனான இராவணனன் போன்றவர்களை அழித்தல் வேண்டும். இராவணன் மாபெரும் வீரன், வேதங்கள் கற்றவன், தவ ஆற்றலால் பல வரங்களைப் பெற்றவன். இசைப்பேராளன். என்றாலும் காமவிருப்பினன். தான் பல மனைவியரையும், காதற் பெண்டிரையும், பெற்றிருந்தும் பிறன்மனை நயந்த பாவியானான். இராவணன் வீடணன் பேச்சையும் கேட்கவில்லை கும்பகருணன் கூறியதையும் செவிமடுக்கவில்லை.

இறுதியில் இந்திரசித்தன் சீதையைவிடுதி என்று சொன்னபோதும் அவன், இந்திரசித்த

உன்னை நீ அவரை வென்று தருதி என்று உணர்ந்தும் அன்றால்
என்னையே நோக்கி, யான் இந்நெடும்பகை தேடிக் கொண்டேன்.
(9123)

என்று கூறி மகனையே அலட்சியப்படுத்தியவன். தவ ஆற்றல் எவ்வளவு பெற்றவனாய் இருந்தாலும், வீர ஆற்றல் எவ்வளவுதான் உடையவனாய் இருந்தாலும், பிறன்மனை நயந்த பேதமையால் வழுக்கி விழுந்து அடிவாங்கி விடுவான் என்ற காவிய நோக்கை உணர்த்தும் முகத்தான் அவன் யுத்தகாண்டத்தின் நாயகன் என்ற தகுதியைப் பெறுகிறான்.

துனிஉறு முனிவன் இராமனை அயோத்தி மாநகருக்கு

அப்பால் கொணர்ந்து அறிமுகப்படுத்தினான். பரதன் இராமனின் ஆயிரம் கேழ் ஒளி பெற்றவன். சடாயு வீரப்போர் புரிந்து இராமனால் இறுதிக் கடன் செய்யப்பெற்ற பேறு பெற்றான். வாலி தம்பியின் மனைவியைக் கவர்ந்தவன். அவனை இராமன் கொன்று அவனுக்கு பேறுதந்தான். பின்னர் இரண்டு சுந்தரர்களும் ஏற்றம் பெற்றனர். இறுதியில் இராமன் இராவணனைக் கொன்றான். திருமாலின் அவதாரமாக இராமன் தோன்றினான். முதலில் இருந்து முடிவுவரை தான் கடவுளின் அவதாரம் என்பதைக் காட்டிக்கொள்ளாமல் மானுடம் வெல்ல வாழ்ந்தான் காவிய நாயகனான இராமபிரான்.



# காணுதி மெய்ம்மை

டாக்டர். அரங்க. இராமலிங்கம்
தமிழ்ப் பேராசிரியர், சென்னை பல்கலைக் கழகம்,
சென்னை - 600 005

மெய்ம்மையைக் காண்பதற்கு எது வேண்டும்? அறிவு வேண்டும். மெய்யைக் காண்பதுதான் அறிவு என்கிறார் திருவள்ளுவர். 'மெய்ப்பொருள் காண்பது அறிவு' ( குறள் 355, 423) என்றும் 'நுண்பொருள் காண்பது அறிவு' ( 424) என்றும் 'செம்பொருள் காண்பது அறிவு' ( 358) என்றும் திருவள்ளுவர் உரைத்திருப்பன உணரத் தக்கவை.

மெய்யாக என்றும் உள்ள அந்த ஆதிமெய்ப்பொருளைக் கண்களால் கண்டு உணரவேண்டும். அனைத்திற்கும் ஆதியாகவும் அழிவில்லாமலும் இருக்கும் அந்த அகரப்பொருளைத் தங்கள் உள்ளத்திற்குள்ளே கண்டு தெளிந்தவர்கள் ஞானியர். இந்நிலையைப் பெற்றவர், ஒருவரைப் பார்த்ததும் அவரைப் பற்றி முழுமையாக உணர்ந்து கொள்வர். அப்படியொரு அரிய காட்சியினைக் கவிச்சக்கரவர்த்தி கம்பர் காட்டுவதைக் காணலாம்.

இராமபிரானும் அனுமனும் முதன்முதலாகச் சந்திக்கின்றனர். சந்திப்பிற்கு முன் அனுமன் மறைந்து நின்று, இராம இலக்குவரைப் பார்க்கிறான். முதல் நிலையில் உள்ளம் உருகுவதாலும், இரண்டாவது நிலையில் உள்ளத்தில் அன்பு மிக்கெழுவதாலும், மூன்றாவது நிலையில் எலும்புகளே உருகும் உணர்வைப் பெறுவதாலும் உணர்கிறான். இவர்களே தருமத்தின் வடிவு என்ற முடிவிற்கு வருகிறான்.

*தருமமும் தகவும் இலர்*
*அன்பினன், உருகு கின்ற உள்ளத்தன்*
*என்பு எனக்கு உருகு கின்றது*
*இவர்கின்றது அளவு இல் காதல்*
*அன்பினுக்கு அவதி இல்லை*
*அடைவு என்கொல் அறிதல் தேற்றேன்*

என அனுமன் உருகுவதாகக் கம்பர் காட்டுகிறார். நல்லுணர்வால் உந்தப்பெற்ற அனுமன், துன்பம் இல்லாத வரவாக நும் வரவு அமையட்டும் எனக் கூறி இராமபிரானை வரவேற்கிறான்.

நீ யார் எனக்கேட்ட இராமனுக்கு அனுமன் விடையளிப்பதாக இரண்டு பாடல்களைக் கம்பநாட்டாழ்வார் படைத்து உள்ளார். தான் யார் என்றும் தன்னுடைய பணி இன்னது என்றும் தன்னுடைய அரசன் சுக்ரீவன் ஆணைக்கேற்ப வருகை தந்ததாகவும் திறம்படக் கூறுகிறான்.

*மஞ்சு எனத் திரண்ட கோல*
*மேனிய மகளிர்க்கு எல்லாம்*
*நஞ்சு எனத் தகைய ஆகி,*
*நளிர் இரும் பனிக்குத் தேம்பாக்*
*கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய*
*கண்ண! யான் காற்றின் வேந்தற்கு*
*அஞ்சனை வயிற்றில் வந்தேன்*
*நாமமும் அனுமன் என்பேன்.*

*இம்மலை இருந்து வாழும்*
*எரிகதிர்ப் பரிதிச் செல்வன்*
*செம்மலுக்கு ஏவல் செய்வேன்*
*தேவ! நும் வரவு நோக்கி*
*விம்மல் உற்று அனையன் ஏவ*
*வினவிய வந்தேன் என்றான்*
*எம்மலைக் குலமும் தாழ*
*இசை சுமந்து எழுந்த தோளான்*

(கிட்கிந்தா காண்டம் அனுமப் படலம் - 15 - 16)

என அனுமன் உரைப்பது உணர்தற்குரியது.

இங்கே நமக்கு வேண்டற்பாலது இராமபிரான் பற்றி அனுமன் கணித்துக் கூறியுள்ள மூன்று கருத்துகள். மேகம் போன்ற மேனியினை உடையவனே என்றும், குளிரும் இரும்பனிக்கு அழியாது மலர்ந்திருக்கும் தாமரை மலரினைப் போன்ற மலர்ச்சி பெற்ற கண்களை உடையவனே என்றும் கருத்துரைக்கின்றான். அனுமனின் இவ்விரண்டு கருத்துகளும் இராமபிரானின் உருவச் சிறப்பைப் புலப்படுத்துகின்றன. மூன்றாவதாக அனுமன் உரைத்த செய்தி இராமபிரானின் உள்ளச் சிறப்பைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது.

தன்னை நாடிவந்தோர்க்கெல்லாம் குளிர்ந்த பார்வையை அளிக்கும் இராமபிரானின் கண்கள் மகளிர்க்கு எல்லாம் ( சீதையை தவிர) நஞ்சாக இருக்கிறது என்பதில் இரு நுட்பங்கள் பொதிந்துள்ளன. ஏகபத்தினி விரதம் பூண்டொழுகும் இராமபிரானின் ஒழுக்க மேன்மையை அனுமன் இதற்குமுன் பார்த்ததில்லை. தற்பொழுதுதான் முதன்முறையாகப் பார்க்கிறான். பார்த்த உடனேயே இவர் ஒழுக்கத்திற்கு ஆணிவேர் போன்றவர் என்றும் தருமத்தின் வடிவு என்றும் முடிவிற்கு வருகிறான். இராமபிரானும் அனுமனின் கண்களைப்பார்த்த அளவில் அனுமனைப் பற்றி உணர்ந்து கொள்கிறார்.

கண்களைப் பார்த்த உடனேயே ஒருவரை ஒருவர் எடைபோட முடியுமா? என்ற கேள்விக்கு முடியும் என்று அருளாளர்கள் விடை பகர்ந்துள்ளனர். உள்ளம் பெருங்கோயில் (கர்ப்பக்கிரஹம்) என்றார் திருமூலர். உள்ளத்தின் கதவுகள் கண்கள் என்கிறார் கண்ணதாசன். மனித மனத்தின் எண்ணங்களைப் புலப்படுத்தும் சாளரங்களாக கண்கள்செயல்படுவதை ஞானியர் அனைவரும் வெளிப்படுத்தி யுள்ளனர்.

*அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்*
*கடுத்தது காட்டும் முகம்.* (706)

என்கிறார் திருவள்ளுவர். நெஞ்சமாகிய உள்ளத்தில் ஒளித்து வைத்திருப்பதையெல்லாம் முகத்தில் உள்ள ஏனைய பொறிகளைவிடக் கண்களே மிகுதியாகக் காட்டிவிடும்.

*நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்*
*கண்அல்லது இல்லை பிற* (710)

என இதனை நுட்பமாகப் புலப்படுத்தியுள்ளார் திருவள்ளுவர். பிறருடைய உள்ளத்தில் உள்ளதை உணர்ந்து கொள்வதற்கு அளக்குங்கோலாக இருப்பது கண் என்பதில் ஆழ்ந்த பொருள் பொதிந்துள்ளது. உயிர்தன் இருப்பைக் கண்கள் வழியே புலப்படுத்திக் கொள்கிறது எனில் மிகையன்று.

ஒருவரின் பார்வையை வைத்தே அவரின் பண்பினைக் கூறிவிடலாம். ஒருவருக்குக் கால் சரியில்லை என்றால் அவரை நொண்டி எனஅழைப்பர். கை சரியில்லை என்றால் முடவன் என்பர். காது சரியில்லை என்றால் செவிடன் என்பர். இப்படி அழைப்பதால் அப்பெயர் அவரின் பண்பினைக் குறிக்காது. ஆனால் ஒருவரின் பார்வை - அதாவது பார்க்கும் நோக்கு - சரியில்லை என்றால் ஆளே

சரியில்லை என்பார்கள். சாதாரணமாக உலக வழக்கில் 'ஆள் ஒரு மாதிரியானவன் போல் இருக்கே; அவன் பார்வையே சரியில்லையே' எனப் பேசுவதைக் கேட்டிருக்கலாம்.

மகளிர்க்கு எல்லாம் இராமபிரானின் கண்கள் – பார்வை நஞ்சாக இருந்தது என்கிறார் கம்பர். கவிச்சக்கரவர்த்தி இப்படிச் சொல்லியிருப்பாரா? சொல்லியிருக்கின்றாரே! அப்படியானால் அதில் ஏதோ நுட்பம் இருக்க வேண்டும். ஆம், இங்கு இரண்டு நுட்பங்கள் பொதிந்து கிடக்கின்றன. ஒன்று ஒழுக்கத்தின் உறைவிடமாகத் திகழும் இராமபிரான் தன் கண்கள் வழி உள்ளே செல்ல முனையும் காம எண்ணங்களை நஞ்சாகக் கருதி வெறுத்து ஒதுக்கியவர். அதாவது புலனடங்கிய அந்தணாளர். இரண்டாவது காதல் உணர்வுடனோ காம எண்ணத்துடனோ தம்மைப் பார்க்கும் மகளிர்க்கு நஞ்சாகத் தம்மை மாற்றிக் கொள்ளும் பண்பாளர் என்பது. நாம் மட்டும் ஒழுக்கமாக இருந்தால் போதாது, மற்றவரின் பலவீனத்திற்கும் நாம் வாய்ப்பினைத் தருதல் கூடாது அல்லவா? சாலையில் வண்டியோட்டுவது போலத்தான் இதுவும். நாம் மட்டும் சாலை விதிகளைப் பார்த்துப் பார்த்துச் சரியாக ஒட்டினால் போதாது. தாறுமாறாக ஓடிவரும் பிற வாகனங்களின் ஓட்டத்தையும் பார்த்துத்தான் நாம் ஓட்ட வேண்டும். இல்லையேல் விபத்து நிச்சயம். சாலையில் நிகழும் விபத்திலிருந்து மருத்தவர் உதவியுடன் விடுபடலாம். ஆனால் வாழ்க்கையில் ஒழுக்கக் குறைபாடு என்னும் விபத்திலிருந்து விடுபடச் சான்றோர்களின் நூல்கள் மருந்தாகத் துணைபுரியும். அதையும் மீறி ஒருவர் வழுக்கினால் தண்டனை நிச்சயம். பாவத்தின் சம்பளம் மரணம். என்ன செய்ய இயலும்? எவரால் காப்பாற்ற இயலும்?

இராமபிரானைப் போலவே அனுமனும் உணர்வு நிலையில் உயர்ந்து இருப்பதைக் கம்பர் உணர்த்துகிறார். தன்னை அறியும் அறிவே அறிவு, பின்னை அறிவெல்லாம் ( வயிற்றுப் பாட்டிற்காகப் படிக்கும் ஏட்டறிவு) பேயறிவு என்கிறார் திருமூலர். தன்னறிவாகிய – உயிராகிய பிரம்மத்தை அறிந்து அதனைச் சார்ந்து வாழும் பிரம்மச்சாரியாகிய அனுமனின் கண்களும் கற்புக்கடம் பூண்டவையே. கற்பெனப்படுவது சொல்திறம்பாமை (ஔவையார்: கொன்றை வேந்தன் : 14) என்பர். தீய வழிகளில் தீய எண்ணத்தில் பார்வையைச் செலுத்தித் தீய்த்துக் கொள்ளாமல் இருத்தலும் கற்புதான். இக்கற்பு தவறின் கண்மலர் சோர்ந்து கருவின் தீ அணைந்து போகும். ஒளி குன்றி ஒலி கெடும்.

அனுமனைப் பார்த்த உடனேயே அவன் கண்களைப் பார்த்த மாத்திரத்தில் அவனைப் பற்றிய முழுக்கணிப்பையும் இராமபிரான் செய்து விடுகிறார். இவ் அனுமன் ஆற்றலும் நிறைவும், கல்வி அமைதியும், அறிவும் நிறைந்தவன். அது மட்டுமன்று, இவன் கற்காத கலைகளே இல்லை. வேதங்களின் பொருளை முழுமையாக அறிந்து தெரிந்தவன் போல உள்ளான். படைக்கும் கடவுளான பிரம்மன் போலவும் அழிக்கும் கடவுளான உருத்திரன் போலவும் (காக்கும் கடவுளான திருமாலைப் போல எனக் கூறவில்லை. காரணம் அத்திருமாலே இராமபிரானாகத் தற்பொழுது பேசுவதால்) உள்ளான். எனக் கூறுகிறார், இராமபிரான்.

*மாற்றம் அஃது உரைத்த லோடும்*
*வரிசிலைக் குரிசில் மைந்தன்*
*தேற்றம் உற்று, இவனின் ஊங்குச்*
*செவ்வியோர் இன்மை தேறி*
*ஆற்றலும், நிறைவும், கல்வி*
*அமைதியும் அறிவும் என்னும்*
*வேற்றுமை இவனோடு இல்லை*
*யாம் என விளம்ப லுற்றான்*

*இல்லாத உலகத்து எங்கும்*
*இங்கு இவன் இசைகள் கூரக்*
*கல்லாத கலையும், வேதக்*
*கடலுமே என்னும் காட்சி*
*சொல்லாலே தோன்றிற்று அன்றே?*
*யார்கொல் இச் சொல்லின் செல்வன்*
*வில் ஆர் தோள் இளைய வீர!*
*விரிஞ்சனோ? விடைவ லானோ?*

*மாணி ஆம் படிவம் அன்று*
*மற்று இவன் வடிவம் : மைந்த!*
*ஆணி இவ் உலகுக்கு எல்லாம்*
*என்னலாம் ஆற்றற்கு ஏற்ற*
*சேண் உயர் பெருமை தன்னைச்*
*சிக்குஅறத் தெளிந்தேன் : பின்னர்க்*
*'காணுதி மெய்ம்மை' என்று*
*தம்பிக்குக் கழறி, கண்ணன்*

(கிட்கிந்தா காண்டம் அனுமப் படலம் : 17,18,19)

என இராமபிரான் கூறுவதாகக் கம்பர் கவினுறக் காட்டுகிறார்.

காணுதி மெய்ம்மை என்று தம்பிக்குச் சொன்னான் கண்ணன் என முடிக்கிறார் கம்பர். ஆம், உண்மைதான். அனுமனின் பரிசுத்தமான இதய கமலத்திலிருந்து வரும் ஒளியினை அவனின் இருகண்கள் வழி கண்ட இராமபிரான் தம்பியிடம் நான் என்னிரு கண்கள் வழி இந்த மெய்ம்மையைக் கண்டு கண்டு களிப்படைகிறேனே! உனக்குத் தெரியவில்லையா ! நீ காணவில்லையா? காணுதி! இப்பொழுதாவது கண்டுகொள் என உணர்த்துகிறார். கண்கள் வழி மெய்ம்மைக் கண்டவரும் காட்டியவரும் கண்ணன்தாமே! அதனால்தான் கவிச் சக்கரவர்த்தி இந்த இடத்தில் இராமன் என முடிக்காமல் கண்ணன் எனப் பாட்டினை முடித்துள்ளார். கற்புத் தீ ஒளி விட்டுப் பிரகாசிப்பதைக் கண்களால்தாமே பார்க்க முடியும்! கண்டெனன் கற்பினுக்கு அணியைக் கண்களால் என அனுமன் கூற்றாகவும் இதனை உறுதி செய்துள்ளார் கம்பர். கற்பாகிய தீயைக் காண்பதற்குக் காண்பவனும் கற்புத்தீயாக இருக்க வேண்டுமல்லவா?

கண் எனும் பொறியின் ஆற்றலை முதல் பாட்டிலேயே நுட்பமாக புலப்படுத்தியுள்ளார் கம்பர்.

*ஆச லம்புரி ஐம்பொறி வாளியும்*
*காசுஅ லம்பு முலையவர் கண்எனும்*
*பூசல் அம்பும், நெறியின் புறம் செலாக்*
*கோச லம்புனை ஆற்று அணி கூறுவாம்*

(பாலகாண்டம் - ஆற்றுப் படலம் : 1)

கோசல நாட்டு மக்கள் ஐம்பொறிகளை வென்று அடக்கியவர்கள் என்பதை முதல் அடியில் கூறிய கவிச்சக்கரவர்த்தி இரண்டாவது அடியில் கண் எனும் பொறியும் நெறியின் புறம் செல்லாக் கோசலநாட்டு மக்கள் எனவிதந்து கூறுகிறார். முதல் அடியில் கூறிய ஐம்பொறியில் கண்ணும் அடங்கியிருக்க, கண் எனும் பொறியைத் தனியே மீண்டும் அழுத்தம் கொடுத்துக் கூறுவானேன்? உரைகாரர் இதற்கு விளக்கம் தருகிறார். கண் தவிர ஏனைய நான்கு பொறிகளும் நின்று பற்றும் பொறிகளாம். ஒலியைக் காது இருந்த இடத்திலிருந்தே பற்றும், நறுமணத்தை மூக்கு தான் இருந்த இடத்திலிருந்தே பற்றும், உணவை வாயினருகே கொண்டு சென்றால்தான் வாய்ப்பற்றும். உடலும் தன்னை நெருங்கிய வரைத்தான் பற்றும், ஆனால் கண் இருக்கிறதே அது சென்று பற்றும்

பொறியாம். அதாவது நெடுந்தொலைவில் உள்ள பொருள்களையும் இருந்த இடத்தில் இருந்து கொண்டே சென்று பற்றும் பொறியாகவும் இருக்கிறது. அதனால்தான் அக்கண்ணாகிய பொறியினை இரண்டாவது முறையாகத் தனியே குறிப்பிட்டு உணர்த்தியுள்ளார்.

உள்ளமாகிய இதயக்கமலத்தில் உணர்வெனும் கருப்புப் பெட்டிக்குள் அறிவாகிய உயிர்த்தெய்வம் ஒளிவிட்டுக் கொண்டிருக்கிறது. கண்பெற்றதன் பயன் கருமாணிக்கத்தைக் காண்பதுதான். ( என் கருமாணிக்கம் வரக் கூவாய் - ஆண்டாள் நாச்சியார் திருமொழி, குயில்பத்து.3) இராமபிரானும் அனுமனும் பார்த்துப் பார்த்துப் பரவசப்பட்டால் மட்டும் போதுமா? நாமும் பெற வேண்டாவா?



# அனலைச் சுட்ட கனல்

முனைவர் பேராசிரியர் புரிசை. ச. நடராசன்
தூய நஞ்சக்கல்லூரி, திருப்பத்தூர்.

இலங்கையர்கோன் இராவணன் மங்கையர் திலகமாகிய சீதையை வன்மருங்குல் வாளரக்கியர் நெருக்க அசோக வனத்திடையே சிறை வைத்தான். அவ்வப்போது வந்து தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு பிராட்டியைத் துன்புறுத்தினான் அறமிலா அரக்கன் என்பதை அவன் செயல் நிருபித்தது. ஜானகி அடைந்த துயரத்திற்கு அளவே இல்லை அவள் அச்சிறைபுக நேர்ந்த சூழலை நினைத்துப்பார்த்து வருத்தினாள்.

அன்று..........

காமுகனாகிய தசமுகன் தன்னை அடைய விரும்புகின்றான் என்று அறிந்து கொண்டும் அவளை அடைவதற்காக நயப்பாகவும் வெஞ்சினத்தோடும் வரம்பு இகந்து பேசுவதைக் கேட்டுக்கொண்டும் பொறுமையாக உயிரைக் காத்து வருகின்ற தன்னைக் காட்டிலும் கொடிய அரக்கியர் எங்கே இருக்கின்றார்கள். வஞ்சனை பொருத்திய மாயமானைப்பின் தொடர்ந்து பிடித்துக் கொண்டு வரச்சொல்லி மணாளனாகிய மன்னனை ( இராமனை) அனுப்பிவிட்டாள். காவலுக்குத் தன் அருகில் நின்று கொண்டிருந்த இலக்குவனைப் பார்த்து , இராமனோடு ஒருமுறை பழகினாலே அவனுக்காக உயிர் கொடுக்கத் துணிகின்ற பெருமக்கள் உலகில் உள்ள நிலையில், உடன் பிறந்த அண்ணனுக்கு அந்த மானால் துன்பம் வந்துள்ளது என்று அறிந்தும் அவனைக் காப்பாற்ற விரைந்து ஓடாமல் நின்று கொண்டிருப்பதற்குக் காரணம் தீய நோக்கமே என்று வசைபாடி அவனைத் துரத்திவிட்டாள்.

இருபெரு வீரர்களும் அவ்விடத்தைவிட்டு அகன்ற நேரத்தில்தான் தனிமையில் இருந்தது, வஞ்சக இராவணனுக்கு வழிஏற்படுத்திக் கொடுத்துச் சிறையெடுப்பதற்கு வருக என அழைப்பதுபோன்று அமைந்தது. கொடிய பாம்பினையொத்த இராவணன் மனதிலும், அவனுடைய ஆளுகைக்குட்பட்ட அசோக வனத்திலும் தானேவந்து புகுந்ததாகச் சொல்ல வேண்டுமேயல்லாது, அரக்கர் தலைவன் தன்னைச் சிறை எடுத்து வந்ததாகச் சொல்லலாமா? இத்தகைய நிலையில், தான் உயிரைத் துறக்காது வாழ்வது உன்னதமாகுமா? அப்படி உயிரோடு இருந்தாலும் உலகம் தன்னைக்குற்றமற்றவள், தூயவள் என்று ஏற்றுக்கெள்ளுமா? கோதண்டராமன், அரக்கர் குலத்தை அடியோடு அழித்துவிட்டுத்

தன்னைச் சிறையிலிருந்து மீட்க வருகின்ற நேரத்தில், இல்லறநெறியில் ஈடுபடுவதற்கான தகுதியைத்தான் இழந்துவிட்டதாகக் குற்றம் சுமத்தினால் அதனை எப்படி மறுத்துரைக்க முடியும் ? ஆகையினால், உயிர்துறத்தலே , அறத்தின் பாற்பட்டதாகும் என்று தீர்மானித்து, மாதவிக் கொடிபடர்ந்துள்ள ஒரு சோலையைச் சென்றடைந்தாள் சீதை, இராமதூதனாகிய அனுமன் தக்க நேரத்தில் இராமபிரானின் திருப்பெயரைச் சொல்லி அவளைத் தற்கொலை முயற்சியினின்றும் காப்பாற்றினான்.

இன்று......

இராவணவதம் முடிந்தது. சீதையைச் சீரோடும் அழைத்து வருமாறு இராமன் கட்டளையிட்டான், வீடணன் சென்று அலங்காரத்தோடு எழுந்தருளுமாறு சீதையிடம் தெரிவித்தான். தேவர் குழாமும், தங்கள் தலைவனாகிய இராமபிரானும், முனிவர் கூட்டமும் குலத்திற்கு மாண்பு சேர்க்கின்ற கற்புடைய மங்கையர் ஈட்டமும் தற்போது தான் இருக்கின்றவாறே காண்பதுதான் தனக்கு மாட்சிமை தருவதாகும். அழகிய கோலம் பூண்டு அவர்கள் முன் தோன்றுவது மேன்மையாகாது என மறுத்துரைத்தாள் அவள். நீலமேனி நெடுந்தகை தனக்கு இட்ட கட்டளையின் குறிப்பு, பிராட்டியைக் கோலப் புனைவோடு அழைத்து வர வேண்டும் என்பதுதான் என வீடணன் தெரிவித்தான். வானநாட்டுத் திலோத்தமை முதலானோர் பிராட்டிக்கு அலங்காரம் செய்து முடித்தனர்.

முன்னொரு காலத்தில் தன்னைவிட்டு நீங்கிச் சென்ற உயிரைப் பின்னொரு காலத்தில், நிலையற்றதான உடம்பு கண்டு, அதனை உட்கொள்ள முயலும் தன்மை போல, மாயமானின் பின்னே தொடர்ந்து சென்றது முதல், தன்னைப் பிரிந்து நின்ற உயிர்த் தலைவனான இராமபிரானைக் கண்ட சீதை, உடனே, அப்பெருமானைச்சார விரும்பும் தன்மையள் ஆனாள். கோசல நாடுடை வள்ளலின் முன் வந்து, கோலப் பொலிவோடு நின்றாள் குலமகள்.

எதிர்வந்து நின்ற சீதையைக் கண்ணுற்ற காகுத்தன், 'நீதிநெறி தவறிய இராக்கதர் தலைவனது நகரத்தில் நெடுநாள் வசித்து, அவன் கீழ் அடங்கி இருந்தாய். அறுசுவை உள்ள உணவு வகைகளை விரும்பி உண்டு வாழ்ந்தாய். நல்லொழுக்கம் அழிந்திடவும் இறந்தாய் இல்லை. இத்தன்மையளான நீ அச்சமின்றி இப்பொழுது இவ்விடத்தில் மீண்டு வந்தது யாது கருதி?' இராமன், 'என்னை விரும்புவான் என்பது உன் கருத்தோ? உயர்குலத்து மகளிர் தம்

கணவரைப் பிரிந்த காலத்து, ஐம்புலன்களை மனம் போனவழி செல்லாதபடி தடுத்து நிறுத்துவர், தலைமுடியைச் சிக்கற வாரி முடியாமல் சடைத் தொகுதியாகத் திரித்து விடுவர்; கற்பு என்னும் பெருந்தவத்தை ஓயாது இயற்றுவர், அங்ஙனம் இருக்கையில் தமக்கு ஒருபழி இடையே வருமானால், தம் உயிரை விட்டொழித்து அப்பழியைப் போக்கிக் கொள்வர். இப்படிப்பட்ட நற்செயல்கள் உன்னிடம் இல்லையே; உனது தீயொழுக்கம் என் அறிவை வலியற அறுக்கின்றது. ஆதலால், இப்பொழுது நீ செய்யக்கடவது இறந்து ஒழிதலாகும். அங்ஙனம் அன்று ஆயின் உனக்குத் தக்கதோர் இடத்திற்குச் செல்லுக' என்று கண்ணோட்டம் சிறிதுமின்றிச் சீதையைப் பார்த்துக் கழறினான் இராமன்.

மேற்சொன்னவாறு சிதையைப் பார்த்து வசைமாறி பொழிந்த இராமனைக் கம்பர், 'புலவர் புந்தியான்' என்று குறிப்பிடுகின்றார். அறிவுடையார் புகழ்ந்து கொண்டாடும் அறிவுடையான் என்பது இத்தொடரின் பொருள். பொருத்தமற்ற வாசகங்களைப் பொருத்தமற்ற நேரத்தில் பேசியவனைக் காப்பியப் புலவர் இத்தொடரால் குறிப்பிடுகின்றார் என்றால் அதற்கு ஏதோ ஓர் உட்கருத்து இருக்க வேண்டும். காப்பியச் சுவைஞர்களை நின்று நிதானிக்கச் சொல்லுகின்றார் கவிஞர். பொறப்பினுக்கு அணியாகவும் அமிழ்தோடு வந்த அமிழ்தமாகவும், அறத்தின் தாயாகவும் பொலிகின்ற சீதாப்பிராட்டியின் கற்புத்திண்மையை அவன் நன்கு உணர்வான் என்றாலும், இராமன் 'கமலக்கண்ணன்' என்று அழைக்கப்பெற்றாலும் அசோகவனத்தில் அவள் மேற்கொண்டிந்த தவத்தின் அருமையைக்காணப் போதிய தவத்தை அவன் செய்யவில்லையே என்று சொல்லின் செல்வனாகிய அனுமன் உரைக்கும் அளவிற்கு உயர்ந்த இல்லறமாண்புடையவள் சீதையென்றாலும், உலகவர்யாவரும் அவருடைய கற்பின் ஆற்றலைக் கண்டு உணரும்படி செய்யவேண்டும் என்னும் கருத்தினாலேயே மரபுநெறி பிறந்து மாதவச் செல்வனான இராமன் இப்படியெல்லாம் உரைத்தான் என்று கருத வேண்டும் என்பர் கம்பர் கவிநுட்பம் அறிந்த கற்றோர்.

இவ்வளவு காலமாக ஊண் உறக்கமின்றித் தன்னுடம்பை ஒறுத்து துன்பங்களைப் பொறுத்து, ஐம்பொறி அடக்கி மனத்தை ஒருவழிப்படுத்தி ஆற்றிய சிறந்த தவமும், நற்குண நற்செய்கைகளும், பித்தர் தம் செயல் என்னும்படி வீணே பழுதுபட்டன. உலகமெங்கும் எப்பொழுதும் நடக்கிற செயல்கள் எல்லாவற்றையும் அறியவல்ல ஞானக்கண்ணை உடையவனும், அனைவர்க்கும் உள்ளத்தின் உணர்வை உண்டாக்குபவனும்,

யாவராலும் கண்போல் அருமையாகப் படைப்பவனும், யாவர்க்கும் கண்போல இன்றியமையாதவனுமாகிய இராமபிரான், தன்னைப்பற்றி இப்படிக் கருதினால் அக்கருத்தை மாற்றும் படியான தெய்வம் வேறு உள்ளதோ? ஆதலால், இறந்து போவதைவிடச் சிறந்தது வேறு ஒன்றுமில்லை என்று அவள் கருதினால் 'சாதி' என்று அவன் கட்டளையிட்டது தகுதியானதே என்று உணர்ந்தாள். எனவே, இளையபெருமாளை அருகழைத்து, தான் மூழ்கும் பொருட்டு நெருப்பினை மூட்டுமாறு கேட்டுக்கொண்டாள். மூத்தவனின் கருத்தறிய இளையவன் பணிந்தான், பெரியன் தனது ஒப்புதலைக் கண்களால் வழங்கினான்.

அக்கினி சாட்சியாகத் திருமணம் செய்து கொள்வதும், மங்கையர் ஒழுக்கத்தைப் பற்றி ஐயமுண்டாகும் போது, அவர்களை அக்கினி சாட்சியாகச் சொல்லும்படி கேட்பதும், மற்றும்பல காரியங்களில், நெருப்பில் இடினும் கெடாது இருப்பின் தூய்மை உடையது எனச் சந்தேகம் தெளிதலும் உலக வழக்கு. பொய்யறியாத மாருதியின் வார்த்தையை மதித்து, ஜானகியை ஏற்றுக் கொள்ளாத காகுத்தன் அங்கையிற் பொருந்திய நெல்லியைப்போலத்தனது உறுதிமொழியைக் கேட்டுச் 'சீதை கற்புடைப்பெருந்தேவியே' என்று மீட்டு அழைத்துத் தன்னோடு சேர்த்துக் கொள்ளல் வேண்டும், என்று அக்கினித் தேவன் இராமனுக்கு முன் வந்து நடுநிலை தவறாத உண்மைபுகன்றான். உலகத்து உயிர்கட்கு எல்லாம் அழிக்கமுடியாத சான்றாகத் திகழும் அங்கியங்கடவுள் உரைத்த வாசகத்தைக் கேட்டு, அவனிடத்துயாதொரு பழியுமில்லை, இனி அவள் தன்னால் நீக்கத்தக்கவள் அல்லள் என்று இயம்பி, பிராட்டியை உளமார ஏற்றுக்கொண்டான் உத்தமத் தலைவன்.

சிறை இருந்த காலத்தில் சீதை, தான் ஏற்றுப் போற்றிப்பாதுகாத்து வரும் கற்பின் திண்மையை, சிறை மீட்கப்பெறும் காலத்தில் எவ்வாறு இழைத்துக் காட்டமுடியும் என்று கவலையோடு இருந்தாள். காலத்தின் கோலமாக இராமபிரான் சீதையின் மனம் நோகப்போசியதன் விளைவாக அவள் அக்கினியில் மூழ்கி இறந்து போவது நல்லது என்று முடிவெடுத்தாள். நெருப்பில் இறங்கிய அவளைக் கைகளில் ஏந்திக் கொணர்ந்து அக்கினித்தேவன், அவருடைய கற்பின் வெம்மை, தன்னைச் சுடுவதாகவும், ஒழுக்கம் தவறாத உண்மையின் வடிவம் அவள் என்றும் எடுத்துரைத்தான். இவ்வண்ணம் தவம்செய்த தவமாம் தையல் வாகைசூடி வானவர் போற்ற உயர்ந்து நிற்கும் மாண்பு உடையவளாகத் திகழ்கின்றாள்.

# கம்பன் வழியில் கச்சியப்பர்

மரபுக் கவிஞர் வே.இரா. சிவஞானவள்ளல், வேலூர்.

தமிழில் இருபெருங்காப்பியங்கள் உள்ளன. ஒன்று கம்ப இராமாயணம், மற்றது கந்த புராணம். இருபெருங் காவிய நாயகர்களும் அசுரர்களை அழித்து அமைதியைத் தோற்றுவித்தவர்கள். இரண்டுமே பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட செய்யுள்களைக் கொண்டவை.

இரண்டு காப்பியங்களும் அருந்தமிழ் வல்ல அகத்தியர் பெருமைகளை அணிவகுத்துச் செல்கின்றன. கம்பர் ஒரு செய்யுளில் சொல்லும் ஒரு நிகழ்ச்சியைக் கச்சியப்பர் ஒரு படலமாகவே பாடிப் பெருமை செய்கிறார்.

கம்ப ராமாயணத்தில் ஒரு நிகழ்ச்சி, அகத்தியர் விந்திய மலையை அடக்கியது.

விந்திய மலை இமய மலையைவிட மிகப் பெரியதாகிப் பெருமைபெற வேண்டும் எனக் கருதியது. வானளாவ உயர்ந்தது. விண்ணரசன், வெண்மதி, விண்மீன்கள் செல்லும் வழிகளை எல்லாம் அடைத்தது. வானவரும் தானவரும் கண்டு அச்சம் கொண்டனர். அகத்தியரிடம் விந்திய மலையை அடக்க வேண்டுமென வேண்டினர். அவரும் விந்திய மலையிடம் சென்று தான் வடக்கே இருந்து தென்னகம் சென்று மீண்டும் வடபுலம் வரும் வரையில் குறுகிக்கிடக்க வேண்டும் என கூறினார், அதுவும் வளர்ச்சி குன்றியது.

இந்நிகழ்ச்சியைக் கம்பர்

*யோகமுறு பேர்உயிர்கள் தாம்உலை வுறாமல்*
*ஏகுநெறி யாது?என மிதித்தடியில் ஏறி*
*மேகநெடு மாலைதவழ் விந்தம்எனும் விண்தோய்*
*நாகம்அது நாகம்உற நாகம்என நின்றான்.*

என்று பாடுகிறார்.

யோகிகளான முனிவர்கள் விந்திய மலையைத் தாங்கள் துன்பம் அடையாமல் கடந்து செல்ல வழியாது என்று அகத்தியரை வேண்டினர் அகத்தியரும் பெரிய மேகங்கள் நீண்டவரிசையில் மாலையணிந்தது போல் உள்ளதும், மிக உயர்ந்ததுமாகிய விந்திய மலையைக் காலால் மிதித்து அதன்மேல் ஏறினார். வான் தோய நின்ற மலை கீழுலகம் சென்று அடையும்படி ஆழ்ந்து போனது. ஒரு யானையைப் போல அகத்தியர் அதன் மீது பெருமிதத்துடன் நின்றார்.

நாகம் என்ற சொல்லுக்கு மலை, கீழுலகம், யானை என்ற பொருள்களும் உண்டு. இந்தச் சொல்லை வைத்து விளையாடுகிறார் கம்பர்.

அகத்தியர் மலை (நாகம்) மீதுஏறி நின்று ( நாகமுற) கீழுலகம் அடையும்படி முகட்டில் யானை (நாகம்) என நின்றார் என்பதை

*நாகமது நாகமுற நாகமென நின்றார்*

என்று பாடுவது செந்தமிழில் செந்தேன் தடவிய வரியல்லவா?

கம்பர் ஒரே செய்யுளில் அடக்கிய இந்த நிகழ்ச்சியை ஏறத்தாழ ஐம்பது பாடல்களுக்குமேல் கச்சியப்பர் கந்த புராணத்தில் விளக்குகிறார்.

கம்பர் போட்டுத் தந்த ஒத்தையடிப் பாதையைத் தேரோடும் தெருவாக்கி மகிழ்கிறார் கச்சியப்பர்.

இந்த ஒரு நிகழ்ச்சிதான் என்பதல்ல அகத்தியர் கடலுண்டது வாதவியை உண்டு செரிமானம் செய்தது, காவிரியைக் கமண்டலத்தில் அடக்கிக் கொண்டு வந்தது எனப் பல நிகழ்ச்சிகளைப் பரக்க பேசுகிறார் கச்சியப்பர்.

தமிழை - சந்தத் தமிழைத் தந்த தவமுனிவன் என்று இருவருமே பல இடங்களில் பேசுகின்றனர்.

ஒளிபொருந்திய கணிச்சி என்ற மழுவாயுதத்தையும், அழகிய நெற்றியில் தீயுமிழ் கண்ணையும், தீச்சுடர் போன்ற மேனியும் கொண்ட சுடர்க் கடவுளான சிவபெருமான் தந்த தமிழை உலகுக்குத் தந்தவர் அகத்தியர்.

*உழக்கும் மறை நாலினும் உயர்ந்து உலகம் ஓதும்*
*வழக்கினும் மதிக் கவியினும் மரபின் நாடி -*
*நிழல்பொலி கணிச்சி மணி நெற்றி உமிழ் செங்கண்*
*தழல்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் - தந்தான்*

என்பது கம்பர் வாய்மொழி

இறைவன் தந்த தமிழைச் சந்தத் தமிழாக்கித் தந்தவர் அகத்தியர் என்பது போல, கச்சியப்பர்

*சந்த நூல் தமிழ் தாபதன்*

என்பார்.

கம்பரைப் போலவே கச்சியப்பரும் கன்னித் தமிழ்வல்ல குள்ள மாமுனி அகத்தியரைக் குறிப்பிடும் பல இடங்களிலும் தமிழோடு தொடர்புபடுத்தியே கூறுகிறார்.

*வண்டமிழ் மாமுனி, மூதுரைத்தமிழ் முற்றுனர் மாமுனி*
*சந்தநூல் தமிழ் தாபதன், மெய்த்தமிழ் முனிவன், வண்டமிழ்*
*முனிவன், பைந்தமிழ் முனிவன், தமிழ் வல்ல முனி*

என்றெல்லாம் அடைமொழி அளித்தே அழைக்கின்றார். இவை எல்லாம் உணர்ந்த பாரதியார்,

*ஆதிசிவன் பெற்றுவிட்டான் - என்னை*
*ஆரிய மைந்தன் அகத்தியன் என்றோர்*
*வேதியன் கண்டு மகிழ்ந்தே - நிறை*
*மேவும் இலக்கணம் செய்து கொடுத்தான்.*

என்று பாடி மகிழ்வதைப் பாடி மகிழ்கிறோம்.

சீதையைத் தேடிச் செல்லும் அனுமனுக்கு இராமபிரான் வழி சொல்கிறார், 'தென்திசை செல்லும் போது பொதிய மலை தென்படும் அந்த அலையை அலட்சியம் செய்யக் கூடாது. அம்மலையில்தான் அகத்தியர் சங்கம் அமைத்து சந்தத் தமிழ் வளர்த்துக் கொண்டிருக்கிறார். அந்த மலையை வணங்கியபின் அவ்விடத்தை விட்டுச் செல்' என்று இராமர் கூறுகிறார்.

*தென்தமிழ்நாட்டு அகன்பொதியில் திருமுனிவன்*
*தமிழ்ச் சங்கம் சேர்கிற் பீரேல்*
*என்றுமவன் உறைவிடமாம் ஆதலினால்*
*அம்மலையை இறைஞ்சி ஏகி*

என்று இராமன் வாயிலாக அகத்தியரைப் புகழ வைக்கிறார்.

எல்லோரும் அகத்தியரையும், அவருடைய தமிழ்ச் சங்கம் இயங்கும் பொதிய மலையையும் வணங்க வேண்டும் என்பது கருத்து.

அகத்தியர் தெய்வ முனிவர், தமிழ் தெய்வத் தமிழ்
க்ச்சியப்பர் ஒருபடி மேலே சென்று அகத்தியர் இறைவனுக்குச் சமம் என்று நாம் எண்ணும் அளவிற்குப் போற்றுகிறார்.

விந்திய மலையைக் கட்டுப்படுத்த தேவர்கள் அகத்தியரைத் தியானித்தனர். அப்போது அவர்கள் அகத்தியரை நோக்கிக் கூறுகிறார்கள்.

*பொன்னார் கழல்கள் அருச்சித்திடப் போது கொய்யும்*
*கைந்நாகம் மாலை நினைந்தே கரா ஒன்று கௌவ*
*என் நாயகனே எனத்தன் கையெடுத்து அழைப்ப*
*அன்னான் அங்கெய்தி விடுவித்தது அறிகிலாயோ?*

தேவர்கள் அகத்தியரை நோக்கி, யானை ஒன்று திருமாலின் அழகிய திருவடிகளை வழிபட எண்ணி மலர்க் கொய்யச் சென்றது. அதன் காலை முதலை ஒன்று கௌவிக் கொண்டது. அது திருமாலை நினைத்து 'ஆதிமூலமே!' என்று அழைத்தது. அப்பெருமான் அங்குவந்து முதலையிடமிருந்து அந்த யானையை மீட்டதை நீங்கள் அறிவீர்கள்.

பூவார் கலத்து அயன் நல்கிய பூவை தன்மேல்
தூவா மயலாய்க் கிளியாகித் தொடர்ந்து செல்லக்
காவாய் பரனே! எனலோடும் கலங்கல் என்றே
தேவாதி தேவன் அருள் செய்தது தேர்கிலாயோ?

தாமரை மலரில் வீற்றிருக்கின்ற நான்முகன் தம்மால் படைக்கப்பட்ட திலோத்தமை என்ற பெண்ணின் மீது குறைவில்லாதக் காதல் கொண்டான். அந்தக் காதல் மயக்கத்தால் கிளியின் வடிவத்தைக் கொண்டு அப்பெண்ணைத் தொடர்ந்து போனான். அவள் 'இறைவா! எம்மைக் காத்தருள்க!' என்று ஓலமிட்டாள். எல்லாத் தேவர்க்கும் முதல் தேவரான சிவபெருமான் 'கலக்கம் கொள்ள வேண்டா!' என்று அருள் செய்தார். இதையும் தாங்கள் அறிவீர்கள். என்றெல்லாம் தேவர்கள் கூறியதாகக் கச்சியப்பர் கூறுகிறார்.

தேவர்கள் இவ்வளவையும் இனையன பலவும் கூறி எங்களுக்காக விந்தியத்தை அடக்கி அருள்புரிய வேண்டும் என வேண்டுகிறார்கள். இவற்றை ஆழ்ந்து நோக்குங்கால் கச்சியப்பர் அகத்தியரைத் திருமாலுக்கும் சிவபெருமானுக்கும் இணையாக வைத்து நோக்குகிறார் என்று தெளியலாம் அல்லவா?

இவ்வாறு கம்பனின் வழியில் சென்று கச்சியப்பர் அகத்தியனை அருந்தமிழாக்கிய செய்திகளை விளக்கிக் கொண்டுபோனால் ஒரு நூலாகவே விரியும். விரிவஞ்சி இத்துடன் நிறைவு செய்கிறேன்.

காகுத்தன் கதையைப் பேசும்
கம்பரைப் போல, தெய்வ
மாகுகன் கதையைப் பேசும்
மாதவர் கச்சி யப்பர்
பாகுதான் என்ப தைப்போல்
பைந்தமிழ் அகத்தி யன்சீர்
வாகுடன் தொகுத்துச் சொன்னார்
வாழிய! அவர்தாள் வாழ்க!

குள்ளமாய் உருவம் தோன்றும்
குறைவிலா உள்ளம் தோன்றும்
வெள்ளமாய் அறிவு பாயும்
வண்டமிழ் வளர்த்து வாழும்
அள்ளவும் குறைந்தி டாத
அருந்தமிழ் ஆற்றல் மேவும்
எள்ளரும் ஏற்ற மிக்க
எழில்அகத் தியர்தாள் வாழ்க!

# சுட்ட சொல்லும் பட்ட வில்லும்

கம்பர் கலைச் சுடர் புலவர். வே. பதுமனார் எம்.ஏ., பி.எட்.,
குடியேற்றம்.

**முன்னுரை:**

கம்பன் படைத்த காவியம், இராமாவதாரம் எனக் கம்பனாலே பெயர் சூட்டப்பட்ட இராமாயணத்தில், இராமனின் வில்லும் சீதையின் சொல்லுமே தலைமையேற்றுக் காப்பியத்தை நடத்திச் செல்கின்றன. அயோத்தி மன்னன் தசரதன் வில்லிலிருந்து புறப்பட்ட அம்பு சலபோசன முனிவர்தம் மகனான சிரவணனைக் கொன்றது. இதையறிந்த முனிவர் இட்ட சாபம் ''என்னைபோல் நீயும் புத்திர சோகத்தால் அழிவாயாக!'' என்பதே தயரதனைப் பொருத்தவரையில் அது வரமே. அது வில்லால்பட்ட தென்றாலும், புத்திரனே இல்லாத தயரதனுக்குப் புத்திர சோகம் ஏற்படப் போகிறதென்றால், முதலில் புத்திர சுகம் ஏற்பட வேண்டுமன்றோ? வில்லால் பட்ட முனிவர், தந்த சாபம் தயரதனைச் சுட்டதென்னவோ உண்மைதான். அதனால் அண்ணல் இராமன் அவதாரமன்றோ நிகழ்ந்துவிடுகிறது! எனவே, முனிவர் தம் சாபம் தயரதனின் வில்லால் ஒருவகையில் வரமாகவே அமைந்துவிட்டதைக் கம்பன் காட்டும் அழகே அழகுதான்!

**தொழுதுவிட்ட அம்பு ; பழுதுபட்ட வில்**

வசிட்ட முனிவரின் ஆசிரமத்தில் இராமன் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினான். அறுபத்து நான்கு கலைகளிலும் ஆர்வம் காட்டிச் சிறந்தான். சிற்றன்னை கைகேயியின் இல்லத்தில் இனிதாக வளர்ந்த நாளில், கூனியின் முதுகின்மேல் சிறுவில் கொண்டு மண் உருண்டையால் விளையாட்டாக அடித்தான் இராமன். அடிபட்ட கூனி, மண் உருண்டையால் அடித்த இராமனுக்குப் பின்னாலில், மண்ணே இல்லாமல் அடித்து விட்டாள்.

வேள்வி காக்க, வேண்டிப் பெற்ற இராமனை விசுவாமித்திர முனிவர், காட்டுக்கு அழைத்துச் சென்றார். எதிர்ப்பட்ட தாடகையைப் பெண் என எண்ணி இராமன் கொல்லத் தயங்கினான். ''இவள் உயிர்களை வாயிலிட்டு உண்ணும் பேய் ; தாய் என எண்ணலாமோ?'' என விசுவாமித்திரர் விளக்கம் கூறித் தாடகையின் மேல் அம்பைத் தொடுக்கச் சொன்னார்.

*அறன் அல்லவும் எய்தினால்*
*அது செய்க என்று ஏவினால்*
*மெய்ய நின்உரை வேதம் எனக்கொடு*
*செய்கை அன்றோ அறம்செயும் ஆறு?*

என முனிவரைத் தொழுது தாடகைமேல் அம்பு தொடுத்தான். சொல்லொக்கும் வேகச் சுடுசரம், தாடகையின் கல்லொக்கும் நெஞ்சில் பாய்ந்தது; அவளின் முதுகின் புறத்தே புலவர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்று!

இந்தச் செய்தி நாடெங்கும் பரவியது, 'என்ன இருந்தாலும் ஒரு பெண்ணை அல்லவா இராமன் அம்பு கொன்றது! அதனால், அரசகுளத்துக்கு வரும் தீமை பெரிதல்லவா? இதை இந்த இராமன் எப்படித்தான் துடைத்தெறிவான் ? தொழுது விட்ட அம்பால் அவன் வில்லுக்கல்லவா பழுது நேர்ந்துவிட்டது?' எனப் பெண்கள் பெரிதும் குமுறினா். 'பெண்ணின்மேல் அம்பு தொடுத்தல் வில்லறமில்லை' என்னும் பேச்சு நாடெங்கும் பரவியது. நாட்டு நடப்புகளில் தாளும் ஊடாடும் எளிமையும், அரண்மனையில் கைகேயியின் அந்தப் புறத்தில் புழங்கும் அருமையும் கொண்ட மந்தரை இதனை நன்கறிந்திருந்தாள். அதனால்தான், இராமன் முடிசூட்டு விழா பற்றிக் கைகேயியிடம் அறிவிக்க வந்த மந்தரை,

*ஆடவர் நகையுற ஆண்மை மாசுற*
*தாடகை எனும்பெயர்த் தாயலாள் பட*
*கோடிய வரிசிலை இராமன் கோமுடி*
*சூடுவான் நாளை; வாழ்வு இது என இராமன்*

வில்லை - கோடிய வரிசிலை - அறம் துறந்த வில் - எனப் பேசுவாள். இந்தப் பேச்சால் இராமன் வரிசிலை - வளைந்த சிலையாய் விட்டது; அறம் துறந்த சிலையாய்விட்டது. பின்னர் சிவதனுசு - வில்லை ஒடித்து சீதையை மணக்க நேரிட்ட போது அவன் வாழ்வில் சிலை நீங்காத இடம் பெற்றுவிட்டது.

**ஏழிரண்டாண்டு ஏற்ற தவம்**

வாலியை மறைந்து நின்று கொன்றதற்கு என்னதான் அமைதி கூறினாலும், வில்லறம் துறந்த பாவம் இராமன்மேல் உள்ளதெனச் சான்றோர் மனம் புழுங்குவர். கோதண்டராமன் வெறும் இராமனாக அறத்தின் முன் நிற்பதை இராமனே பலவிடங்களில் எண்ணி எண்ணிச் சாம்புகிறான். எனவே அவன் வில் பழுதுபட்ட வில்லாகவே - இராமனுக்குப் பழியினைத் தீற்றும் வில்லாகவே - விளங்கியது.

இந்தப் பழிபாவங்களை எல்லாம் கழுவிக் கொள்ளவே, கைகேயியின் சாபம், இராமனைப் பொறுத்த வரையில் வரமாகவே காரியப்பட்டது. அரசர்க்குரிய ஆடை அணிகலன்களைத் துறந்து, நாட்டையும் நாட்டு மக்கள் உறவையும் துறந்து தாழ் இரும் சடைகள் தாங்கி, தாங்க அரும் தவம் மேற்கொண்டு ஏழிரண்டு - பதினான்கு ஆண்டுகள் பூழி வெங்கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி நின்றான் இராமன். இவையெல்லாம் நடந்து முடிந்த போதுதான் - இராமன் வில் துய்ய வில்லாய், இராவணன் எதிர்த்தபோரில் உலகமெல்லாம் தொழத்தக்க வில்லாய் நின்று மறம் கொன்று அறம் விளைந்தது. அதனால்தான், இது வரை எதிராளியின் எண்ணம் எதுவெனக் கேளாமல் ஒருதலைப் பட்சமாகச் செயல்பட்ட இராமன் கையம்பு, தன் மனைவியைக் களவாடிச் சென்ற இரக்கமற்ற இராவணனிடம் தூது அனுப்பியும், போர்க்களத்தில் எல்லாம் இழந்து வெறுங்கையனாய் இராவணன் நின்ற போது இதுதான் சமயம் எனச் செயல்படவில்லை, மாறாக ''இன்றுபோய் நாளைவா'' என மேலும் இராவணனுக்குத் திருந்திட வாய்ப்புத் தந்தான்: வில்லறம் காத்தான், பேராண்மையிலும் ஊராண்மை காத்தான். இது எதனால் விளைந்தது? பதினான்கு ஆண்டுகள் காட்டில் தவம் முயன்றதால் இராமன் பெற்ற தவத்தின் பயனால் விளைந்ததென்பது கண்கூடு.

**நீதியா நியாயமா ?**

தவத்தால் அறத்தை நிலைநிறுத்திய அண்ணல் இராமன், சிறையில் வாடிய செல்வியான சீதையின் மனம் அறியாமல், படம் எடுத்துச் சீறும் பாம்பைப் போல் சுடுசொல்லால் சுடலாமா?

*ஊண் திறம் உவந்தனை ஒழுக்கம் பாழ்பட*
*மாண்டிலை முறைதிறம்பு அரக்கன் மாநகர்*
*ஆண்டு உறைந்து அடங்கினை : அச்சம் தீர்ந்து*
*இவண் மீண்டது என்நினைவு?''*

என்னும் நஞ்சினும் கொடிய சொல்லால் சுட்டானே இது அறமா? தருமமா? நீதியா? நியாயமா? இவ்வாறு இராமாயணம் படிப்பவர் மனத்தில் வினாக்கள் விசையோடு எழுவது இயல்பே ஆகும். தவத்தால் அறந்தலை நின்ற இராமன் வாயிலிருந்து வெளிப்பட்ட சொற்கள், சீதையின் நெஞ்சத்தைச் சுட்டதென்னவோ உண்மைதான். ஆனால் அவன் சுட்டதற்குக் காரணம் இல்லாமல் இல்லை.

**சீதையின் சொல்லால் விளைந்த சோகங்கள்**

மிதிலைச் செல்வியாய் இராமன் நெஞ்சுபுகுந்த சீதை, அயோத்தியில் புகுந்தபோதும் அறியாப் பெண்ணாகவே

நுழைகிறாள். காடாள இராமன் புறப்பட்ட போது, நானும் வருவேன் எனச் சொல்லி பின்னர் நடக்கும் சோகங்களுக்கெல்லாம் சுக்கானாய் பணிசெய்கிறாள் சீதை. காடுவந்தால் இடர் தருவாய் எனவும், காடு சுடும் எனச் சொல்லியும் சீதையின் வரவைத் தவிர்க்கப் பார்த்தான் இராமன். ஆனால் சிவந்த வாய்ச் சீதையோ நான் உடன் வந்தால் இடராகுமோ? நின் பிரிவினும் சுடுமோ அப்பெருங்காடு எனச் சுடுகாட்டை நினைவூட்டி இராமன் மனத்தைச் சுட்டுவிடுகிறாள்.

மாரீசன் மானாய் வந்து மருட்டிய போது மானைப் பிடித்துத் தருமாறு இராமனைத் தூண்டுகிறாள் சீதை. இளைய பெருமான் இலக்குவனன் தானே மானைப் பிடித்து வருவதாய்ச் சொல்லவும், நாயக நீயே பற்றித் தருகலை போலும் என இராமனை மானின் பின்னால் போக்கினாள். மானின் வஞ்சனையால், வெகுதூரம் சென்ற இராமன், அம்பால் அதைக் கொன்றபோது, அதுவே இராமனின் குரலில் ஓலமிட்டு மாய்ந்தது.

அன்னைக்குக் காவலென நின்ற தம்பி இலக்குவனன், இது மாயம் என்று உணர்ந்து அமைதியாகவே நின்றான். சீதையோ துடிதுடிக்கிறாள்; மானின் பின்னால் இராமனை அனுப்பிவள் அவள்தானே! அதனால் கொதிக்கிறாள்; சிவந்த வாயிலிருந்து புறப்படும் சொற்களும் தீயெனச் சுடுகின்றன.

'என்றன் கோமகன் மாயையால் இற்று வீழ்ந்த குரல்கேட்டும் என்னயல் நிற்றியோ இளையோய்! ஒரு நீ!' என்று இளையவன் நெஞ்சைச் சுட்டுத் தீர்த்தாள்.

' இந்தக் காட்டில் என் அருகில், இளைவனாகிய நீ, தனியே நிற்கலாமோ?' எனச் சீதை பொதுவாகக் கூறினாலும், அண்ணலும் அவனும் வெங்கொடுமைக் காட்டில் ஏதம் இன்றித் தூங்குவதற்காக வில்லை ஊன்றிய கையோடும், வெய்து உயிர்ப்பினோடும் இரவு விடியுமட்டும் கண்ணிமைக்காமல் காத்து நின்ற இளையவனுக்கு இச்சுடு சொற்கள் எப்படித் துயரை விளைவித்திருக்கும் என நாம் எண்ணிப் பெருமூச்சு விடுகிறோம்.

இத்தோடு நில்லாமல் சீதை 'ஒரு பகல் பழகினார் உயிரை ஈவரால்.... நீயோ பெருமகன் துன்பம் கேட்டும் அசையாமல் நிற்கிறாய்... இனி, நான் எரியிடைக் கடிது வீழ்ந்து இப்போதே இறப்பேன்' எனக் கூறிக் காட்டுத் தீயிடைப் புகுந்து உயிர்விடச் செல்கிறாள். உடனே இளையவன் அண்ணல் இராமனைத் தேடிப் புறப்படுகிறான். இளையவனிடம் சிந்திய சுடுச்சொற்களால் விளைந்தது என்ன?

**சிறையிருந்த தவச் செல்வி**

சீதையின் மாதவக் கோலம், இராவணனால் அவக்கோலமாகிறது. சீரைச் சுற்றி வாழ்ந்த சீதை, அசோகவனத்தில் சிறை வைக்கப்படுகிறாள். அவளைப் பிரிந்த சோகத்தால் இராமன் வாலியை மறைந்து நின்று கொல்ல வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகிறான். சீதையோ பத்துத் திங்கள் இராகவன் 'வரும் வரும்' என்று மாதிரம் அனைத்தையும் அளக்கும் கண்ணளாய் இளையவன் தொகுத்த சாலையில் ஓராடையோடு இருந்த இடம் செல்லரித்திடவும் எழாமல் அண்ணலை எண்ணி எண்ணியே தவம் செய்கிறாள்.

அசோகவனம் சீதைக்குத் தவம் முயலும் பர்ணசாலையாகி விட்டது. அவள் அடிக்கடி புலம்பத் தொடங்கினாள். " ஐயன் ஏன் என்னைக் காண வரவில்லை?"

*என்னை நாயகன் இளவலை எண்ணலா விளையேன்*
*சொன்ன வார்த்தை கேட்டு அறிவுஇலள் எனத் துறந்தானோ*

என ஏக்கப் பெருமூச்சு விட்டாள்.

**சுடுசொல் வேள்வி குண்டம்**

அனுமன் சீதையை அசோகவனத்தில் கண்டபோது, 'என்கற்பினை எங்ஙனம் இழைத்துக் காட்டுவேன்?' என்றே மனம் வெதும்பினாள். 'என் நாயகன் நீ இற்புகத் தக்கவளில்லை மாற்றான் சிறை இருந்தாய் என வெறுத்தால் நான் என்ன செய்வேன்' என்று மனம் சாம்புகிறாள். இத்தகைய தவத்தால், சீதையின் சுடு சொற்களும், குளிர்ந்த சொற்களாய் எண்ணியதை எண்ணியவாறு முடிக்கும் தவசிகளின் சொற்களைப் போல வினையாற்றத் தலைப்பட்டுவிட்டன.

அரக்கர்கள் அனுமன் வாலில் தீயிட்டபோது முதன்முதலில் அதை அவிக்க அங்கியங்கடவுளுக்குச் சீதை ஆணையிடுகிறாள். தீ அணைகிறது. ஆற்றல் சான்ற இராவணனையே துரும்பெனக் கருதித் துச்சமாய்ப் பேசுகிறாள். இத்தகைய தவச்செல்விக்கு அண்ணல் இராமன் வைத்த சோதனைதான் ஊண்திறம் உவந்தனை போன்ற சுடு சொற்களால் அமைந்த வேள்விக் குண்டம்.

**புரையோடிப் போனபுண்**

'என்னயல் நிற்றியோ இளையோய் ஒரு நீ' என்று அன்று அடாது கூறிய சொற்கள் இளையவன் மனத்தை எப்படிச் சுட்டுச் சாம்பலாக்கி இருக்கும்? தீப்புகுதல் நடக்க வேண்டும் என்று

பலகாறும் சீதை நெஞ்சில் ஒரு உறுத்தல் இருந்தவண்ணம் உள்ளது. 'கற்பினை எங்ஙனம் இழைத்துக் காட்டுவேன்' என அடிக்கடி நினைப்பவள் சீதை. அவள் நெஞ்சில் புரையோடிப் போன புண், இளைய பெருமானை அன்று ஏசிப்பேசிய சொற்கள் இவற்றை யெல்லாம் குறிப்பால் உணர்ந்த அண்ணல் இராமன் சீரோடும் வந்த சீதையை அமைய நோக்கினான்.

புரையோடிய புண்ணை அறுத்துச் சுடுவது அக்கால மருத்துவ முறை எனவேதான், அன்று அடாது பேசிய சீதை நெஞ்சினை அறுப்பது போல அடாதன பேசினான். இராமன் தன்வாயால் தீப்புகு எனக் கூறவில்லை. மாறாக '' சாதியால் தக்கதோர் நெறியால் போதியால் '' என்றே கூறினான். ''சாவாய் இல்லை தக்கதொரு நெறியில் போயொழிவாய்'' எனும் பொருளிலா இராமன் பேசினான் ? '' சாதிப்பாயாக! அல்லது தக்கதொரு வழியில் போவாயாக'' எனப் பேசினான்.

**கற்பைச் சாதித்துக் காட்ட முடியுமா?**

யாரை என்னயல் ஒரு நீ நிற்றியோ? எனச் சொல்லால் சுட்டாளோ, அந்த இளைய பெருமாளையே தீ மூட்டச் சொன்னாள் சீதை இராமனும் கண்குறிப்பால் தீ மூட்டச் சொன்னான்.

' மனத்தினால் வாக்கினால் மறுவுற்றேன் எனின் சினத்தினால் சுடுதியால் தீச்செல்வா' எனச் சொல்லிச் சீதை தீப்புகுந்தாள். அந்தத் தீயோ சீதையின் கற்புத் தீயினால் எரிந்தது அங்கியங் கடவுள் சீதையைக் கையினால் சுமந்து வெளிக் கொணர்ந்தான், சீதையின் கற்பு தன்னைச் சுட்டதாய்ச் சான்று சொன்னான்.

இவ்வளவும் நடந்து முடிந்த பின்னரே, சீதையின் நெஞ்சில் நீண்டநாள் புரையோடிய புண் ஆறியது. இளையவன் இட்ட தீயால் சுடப்பட்டுப் புரை நீங்கியது. தீப்புகுவேன் என்று சொன்ன சீதையின் சொல்லும் மெய்யாகிறது இவற்றால், இராவணன் வைத்த அசோக வனத்தில் சீதை வாழ்ந்த புன்மையும் பொசுக்கப்பட்டுவிட்டது. கற்பினை இழைத்துக் காட்டும் வாய்ப்பும் இராகவன் தன் சுடு சொற்களால் வந்தது. அதனால் எல்லாம் நன்மையாகவே முடிந்தது.

**முடிவுரை :**

தவத்தின் மேன்மையால், நோன்பின் ஆக்கத்தால் அண்ணல் இராமனின் பட்டவில்லும், பாட்டுக்குரிய வில்லாய் மறத்தைக் கொன்று அறத்தை நிலை நிறுத்தியது. அதைப் போலவே சீதை வாயால் சுட்ட சொல்லும் தவமேன்மையால் கற்பு இட்ட சொல்லாய்க் கனிந்தது, காலத்தை வெல்லும் கவிதையில் நின்றது!

# கம்பனும் வள்ளுவனும்

குறளேந்தி வே. கோதண்டராமன்
தலைமை ஆசிரியர் (ஓய்வு),
வேலூர் -9

கல்வியிற் பெரியவர் என்னும் மாண்புகழ் பெற்ற கம்பர் இயற்றிய இராமாயணம் ஒரு கலைக்கோயில் ஆகும். சங்க காலம் முதல் தற்காலம் வரை நிலவிய தமிழ் நூல் கருத்துகள் சாரமனைத்தும் கம்பர் தம்காவியத்தில் பெய்து வைத்துள்ளமை, உணர்ந்து படிப்போர்க்கு உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்கும்.

அதிலும் குறிப்பாக வான்புகழ் வள்ளுவரின் வளமார் கருத்துகளை மட்டுமின்றி, அவர் குறிப்பிட்டவாறே திருக்குறளையும் எடுத்து ஆண்டுள்ள இடங்கள் ஏராளமாம். அக்காலத்தில் திருக்குறளுக்கு உரையெழுதிய ஆசிரியர் பதின்மரோடு சேர்ந்து பதினோராவது உரையாசிரியராகக் கருதத் தக்க அளவிற்கு அவர்களைக் காட்டிலும் உன்னதமாக உணர்ந்து உணர்ந்து உரையெழுதியுள்ளார் கம்பர் எனலாம். சுமார் 700 குறள்கள் கம்பர் காப்பியத்தில் கையாண்டுள்ளார் என்னும் ஒரு குறிப்பும் ஆய்வில் காணக்கிடக்கின்றது. இவை யாவும் பொன்னில் பதித்த வயிரங்களாகப் படிப்போரை ஈர்த்து இன்பமூட்டுகின்றன.

தமிழிலுள்ள வேறு எக்காவியத்திலுமில்லாத அளவுக்குக் கம்பராமாயணத்தில் திருக்குறட்பாக்கள் மிகுதியாக இடம் பெற்றறுள்ளன வென்பது வெளியிடை மலையாகும். அதுமட்டு மன்றி திருக்குறளின் இலக்கணத்துக்கு இலக்கியமாக விளங்குவது கம்பராமாயணமே என்று கருதத் தக்க அளவிற்கு அகச் சான்றுகளும் புறச் சான்றுகளும் ஏராளமுண்டு.

**திருக்குறட் பாயிரம்:**

கம்பன் தன் காவியத்தைத் தொடங்கும் போதே வள்ளுவர் வகுத்த வழியில் நின்றே தொடங்குகின்றான்

*உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்*
*நிலைபெறுத்தலும், நீக்கலும், நீங்கலா*
*அலகு இலா விளையாட்டு உடையார் - அவர்*
*தலைவர் , அன்னவர்க்கே சரண் நாங்களே.*

என்ற எடுத்த எடுப்பிலுள்ள கடவுள் வாழ்த்துப் பாடலைப் படிக்கும்போது

*அகர முதல எழுத்தெல்லாம், ஆதி*
*பகவன் முதற்றே உலகு (1)*

என்ற குறள் நினைவிற் தோன்றாமற் போகாது.

கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்னும் நான்கு அதிகாரங்களும் திருக்குறளுக்கும் பாயிரமாய் அமைந்திருக்கின்றன. வாழ்த்து ஆற்றுப்படலம், நாட்டுப்படலம், நகரப்படலம் இந்நான்கையும் தன் காவியத்திற்குப் பாயிரமாய் அமைத்திருக்கின்றான் கம்பன். இதில் வள்ளுவர் முறையைக் காணலாம். அதாவது முதலில் வள்ளுவரைப் போலவே பொதுக் கடவுளை வணங்கி, ஆற்றுப்படலத்தில் மேகத்தின் சிறப்பை - மழையின் பெருமையைக் குறிப்பிட்டுச் செல்கிறான் ( வான்சிறப்பு)

*கூற்றம் இல்லை, ஓர் குற்றம் இலாமையால்;*
*சீற்றம் இல்லை, தம் சிந்தையின் செம்மையால்,*
*ஆற்றல் நல் அறம் அல்லது இலாமையால்,*
*ஏற்றம் அல்லது, இழித்தகவு இல்லையே. (70)*

இதனால் குற்றங்களைச் செய்யாமை, சிந்தையில் சினமின்மை நல்லறங்களைச் செய்தல் ஆகிய அறங்களை வலியுறுத்தியதைக் காணலாம்.

*தங்குபேர் அருளும் தருமமும் துணையாத்*
*தம்பகைப் புலன்கள் ஐந்து அவிக்கும்*
*பொங்கு மாதவமும் ஞானமும் புணர்ந்தோர்*
*யாவர்க்கும் புகல் இடம் (98)*

கருணையுள்ளவர்கள் அறம் அறவாதவர்கள், ஐம்புலன் களையும் அடக்கியாள்கின்றவர்கள், தவத்தையும் அறிவையும் உடையவர்கள் உலகப் பற்றை விட்டவர்கள், முனிவர்கள் யாவர்க்கும் அயோத்தி புகலிடமாக விளங்குவது என்று கூறுவதன் வாயிலாக நீத்தார் பெருமை நம் நினைவுக்கு வருகின்றது.

கோசல நாட்டு வளத்தையும், மக்கள் குணங்களையும் குறிப்பிடுங்கால்

*கலம் சுரக்கும், நிதியம், கணக்கு இலா*
*நிலம் சுரக்கும், நிறை வளம், நல் மணி*
*பிலம் சுரக்கும், பெறுவதற்கு அரிய தம்*
*குலம் சுரக்கும், ஒழுக்கம் - குடிக்கு எலாம். (69)*

என்னும் பாடல் படிக்குங்கால்

ஒழுக்கம் உடைமை குடிமை, இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். (133)

என்னும் குறட்பாவின் முதலடியின் பொருளை நாம் உணர்கிறோம்.

மக்கள் பிறந்த மகிழ்ச்சியில் தயரதன் தான தருமங்களைச் செய்கிறான். இதனைக் கம்பர்

*இறை தவிர்ந்திடுக பார், யாண்டு ஓர் ஏழ், நிதி*
*நிறைதரு சாலை தாள் நீக்கி, யாவையும்*
*முறை கெட, வறியவர் முகந்து கொள்க எனா*
*அறை பறை என்றனன் - அரசர் கோமகன் (289)*

ஏழாண்டுக்கு வரி கொடுக்க வேண்டாம். கருவூலத்தின் கதவின் பூட்டை திறந்துவிடுங்கள். ஏழைகளே எல்லாவற்றையும் வாரிக் கொண்டு போகலாம் என்று பறையடித்துத் தெரிவியுங்கள் என்னும் கருத்து விளங்கப் பாடியுள்ளமை

*வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை மற்றெல்லாம்*
*குறியெதிர்ப்பை நீரது உடைத்து (221)*

என்னும் திருக்குறளின் சாரமன்றோ!

பரதனைவிட இராமன் தன்மகன் என்றே கருதி அன்பும், பாசமும் காட்டி ஆற்றலூட்டி வளர்த்த தூய்மையுடைய கைகேயி, கூனியால் மனமாறியதைப் பாடுகின்ற போது கம்பன் உட்பகை என்னும் அதிகாரத்தில் உள்ள கருத்தை யெல்லாம் உட்படுத்தி பாடுகின்றமை அறியலாம்.

*இன்னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல்*
*துன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள் (445)*

முந்திரி போல் வடிவம், மந்திரிக்கேற்ற சொல்வன்மை இதுதான் மந்தரையின் பண்புக்குச் சுருக்கம்.

இளம்வயதில் இராமன் விளையாட்டாக கூனியின் முதுகை நிமிர்த்தும் போக்கில் மண்ணுருண்டையால் வில்லில் எய்தான். அதனை உள்ளத்தே கருவாக்கி உருவாக்கி உட்பகையோடு வளர்த்து வந்த, வில்லைப்போல் வளைந்த கூனி நாணே இல்லாமல் சொல்லம்பால் இராமனுக்கு மண்ணே இல்லாமல் செய்துவிட்டாள். அதுமட்டுமா? கோசலை, கைகேயி, சுமித்திரை ஆகிய மூதேவியர் மற்றும் தாரை, மண்டோதரி ஆகியோரின் மங்கல நாண்கள் அற்றிடவும் செய்திட்டாள்.

*வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக*
*கேள்போல் பகைவர் தொடர்பு (882)*

*உறல்முறையான் உட்பகை தோன்றி ன் இறல்முறையான்*
*ஏதம் பலவும் தரும் (885)*

*எட்பகவன்ன சிறுமைத்தே ஆயினும்*
*உட்பகை உள்ளதாம் கேடு (889)*

என்னும் குறள்களுக்கு விளக்கமாக கூனியின் பாத்திரம் கம்பனின் பாத்திரத்தால் காட்டப்படுகிறது எனலாம். அமைதியாக எடுத்து வைத்த ஆவேசப் புயலாக கூனி காட்டப்படுகிறாள்.

எக்காப்பியத்திலும் இல்லா அளவிற்கு,ஏழு எட்டாப் புகழை யெல்லாம் எட்டி நின்ற இராவணன் பிறன்மனை நோக்கிய பெரும்பிழையால் கெட்டான் என்பதே இராமாயணத்தின் சாரங்களில் ஒன்று.

இன்றைய இந்திய அரசியல் சட்டத்தில் 144 என்னும் பிரிவைத் தடுப்புச் சட்டமாகப் பயன்படல்போல திருவள்ளுவரும் 144- ஆம் குறளில்

*எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்*
*தேரான் பிறனில் புகல்.*

என்று எச்சரிக்கையாக பிறனில் விழைவோர்க்கு அறிவிக்கின்றார்.

*இந்திரற்கு இந்திரன், எழுதல் ஆகலாச்*
*சுந்தரன், நான்முகன் மரபில் தோன்றினான்*
*அந்தரத்தோடும் எவ் உலகும் ஆள்கின்றான்*
*மந்திரத்து அரு மறை வைகும் நாவினான். (3359)*

*முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய*
*பெருந்தவமும் முதல்வன் முன்னாள்*
*எக்கோடி யாராலும் வெலப்படாய்*
*எனக் கொடுத்த வரமும், ஏனைத்*
*திக்கோடும் உலகு அனைத்தும் செருகடந்த*
*புயவலியும்.... (3899)*

*வாரணம் பொருத மார்பும், வரையினை எடுத்த தோளும்*
*நாரத முனிவர்க்கு ஏற்ப நயம்பட உரைத்த நாவும்*
*தார்அணி மௌலி பத்தும், சங்கரன் கொடுத்த வாளும்*
*வீரமும், களத்தே போட்டு, வெறுங்கையே மீண்டு போனான்*

இத்தகு பேராற்றலும், பெருந்தவவலிமையும் கேவலம் பிறன்மனை நோக்கியதால்தானே இராவணன் கெட்டான்.

ஆகவேதான் திருவள்ளுவர் எல்லா ஆண்மையை விட (ஊராண்மை, காராண்மை, பேராண்மை) பிறன்மனை நோக்கா ஆண்மையினைப் பேராண்மை எனக் காட்டினார்.

*பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு*
*அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு (148)*

இக்குறளுக்கு ஏற்ப வாழாத இராவணன் தினைத்துணையும் நோக்காது பிறனில் விழைந்து தான்கெட்டதோடு தன் புகழோடு தன் இனத்தாரும், நாடும்,நகரும் கெடக் காரணமானான்

மகா வீரர் எந்தப் போரிலும் சென்று வாகை சூடியவர் அல்லர். ஆனால் அவர் மகாவீரர் என்று பாராட்டப்பெறக் காரணம் காமத்தை வென்றதால்தான் என்பது இங்கு நோக்குதற்குரியது.

இராமனின் போராண்மையும், பேராண்மையும் இராமாயணத்தில் பலவிடங்களில் காணலாம். குறிப்பாக யுத்தகாண்டத்தில் இராமன் இராவணனுடன் முதற்போர் புரியும் படலத்தில் காணும் பாடல் ஒன்று.

ஆள் ஐயா! உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை, இன்று போய் போர்க்கு
நாளைவா என நல்கினான் - நாகு இளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்

இன்று போய் போர்க்கு நாளை வா என்றும் அருள்வாக்கு எண்ணுங்கால் முப்பாலில் படைச் செருக்கு என்னும் அதிகாரத்தில் வந்துள்ள

*பேராண்மை என்ப தறுகண்ஒன்று உற்றக்கால்*
*ஊராண்மை அற்றதன் எஃது (773)*

என்னும் குறளை நினைவூட்டுகின்றது. பேராண்மை என்பது வீரமாகும். ஆனால் போரில் வீழ்ந்தவர்மேல் காட்டும் இரக்கம் அதனிற் சிறந்தது. அந்த வகையில் இராமன் வாயிலாக இராவணனுக்குக் காட்டுவது கம்பர் தாம் திருக்குறளில் உணர்ந்த உணர்வின் வெளிப்பாடேயாகும்.

இவ்வளவு ஏன்? கம்பர் பாலகாண்டத்தில் சி றப்புப்பாயிரத்தில்

*வையம் என்னை இகழவும் மாசு எனக்கு*
*எய்தவும் இது இயம்புவது யாது எனில்*
*பொய்யில் கேள்வி புலமையினோர் புகல்*
*தெய்வமாக்கவி மாட்சி தெரிக்கவே (6)*

என்று கூறும் அவையடக்கப் பாடலில் தெய்வமாக்கவி என்று வால்மீகியைக் குறிப்பதாகச் சொன்னாலும் அவர் ஆழ்மனத்தில் தெய்வப்புலவர் திருவள்ளுவரே நின்றுள்ளார் என்பதை பொய்யில் புலவர், தெய்வப்புலவர் என்னும் இரண்டு சொற்றொடர் நமக்கு அடையாளம் காட்டுகின்றதன்றோ?

## மறைவலான்

வாழியூர். வே.இராசவேலன் எம்.ஏ.,எம்.எட்.,
செயலாளர் வாழியூர் கம்பன் கழகம்.

ஆண்டவன் இருக்கும் ஆலயத்தின் கோபுரம், சிற்பியின் அற்புதக் கைவண்ணம். கோபுரத்துக்கு எழிலூட்டும் வண்ணச் சிற்பங்கள் ஒவ்வொன்றும் நம்மை நோக்கி, பார்பார் என் எழிலைப் பார் என்று தம் புன்னகையைத் தூதுவிடுகின்றன.

கம்பன் காவியம் ஓர் அற்புதக் கலைக்கோயில். கற்பனையே அதன் கோபுரம். அக்கோபுரத்துக்கு ஒளியூட்டும் சிற்பங்களே காவியப் பாத்திரங்கள். ஒவ்வொரு பாத்திரச் சிற்பத்தையும் கண்டு சுவைக்க முயன்றால் நம் கருத்து அப்பால் போகாது. ஆதலால் ஒன்றிரண்டு தலைமைப் பாத்திரச் சிற்பங்களை மட்டும் நோக்கிவிட்டு அப்பால் செல்கின்றோம்.

கம்பன் கலைக் கோயிலின் கற்பனைக் கோபுரத்தில் தலைமைப் பாத்திரங்கள் மட்டுமன்று, பற்பல துணைப் பாத்திரங்களும் உண்டு. அப்பாத்திரங்கள் சிறியனவாக இருக்கலாம் , ஆனால் கவர்ச்சியில் கலைப்பணியில் - படைப்பில் - தலைமைப் பாத்திரங்களுக்கு சரிநிகர் சமானமாகத் தலைநிமிர்ந்து அவை நிற்கின்றன. ஆலயத்தின் கோபுரச் சிற்பங்கள், கோபுரத்தைத் தாங்குவதில்லை. கோபுரத்தையே ஆதாரமாகக் கொண்டு அதற்கு அழகு ஊட்டுவன. அவை கம்பகாவியக் கோபுரச் சிற்பங்கள், அழகு மட்டும் ஊட்டுவன அல்ல அந்தக் கலைக் கோபுரம் சாயாமல் அதற்கு ஆதாரமாகவும் தாங்கி நிற்கின்றன. இதுதான் கம்பன் செய்த கவிரசாயனம் என்பார் அருட்கவி அரங்க. சீனிவாசன் அவர்கள்.

கம்பராமாயணத்தில் கம்பன் எவ்வளவோ சிறுபாத்தி ரங்களைப் படைத்துள்ளான். அப்படிப்பட்ட சிறுபாத்தி ரங்களுள் ஒன்றுதான் சுதிக்கணன்.

கம்பன் சுதிக்கணனை **மறைவலான்** என்று அழைக்கின்றான்! அவன் மறைகளில் வல்லவன், ஆகவே அவ்வாறு அழைக்கப்படுகின்றான். அவன் மறைகளில் மட்டுமா வல்லவன்? தவம் செய்வதிலும் வல்லவன். நடக்க இருப்பதை நன்றாக அறிந்தவன்.

சுதிக்கணன் என்பது உக்கிரமான தவத்தையுடையவன் என்ற காரணத்தால் வந்தபெயர். வடமொழியில் இவனை சுதிக்ஷணர் என்பர் இவர் ஒரு முனிவர். இவருடைய ஆசிரமம் அகத்திய முனிவருடைய ஆசிரமத்துக்கு வடக்கு திசையில் சிறிது தூரத்தில் இருந்தது என்பர் .

அது நாகபுரிக்கு அருகில் இருக்கலாம் என்பர் ஆராய்ச்சியாளர்.

இராமன் தம்பியோடும், மனைவியோடும் பத்தாண்டுகள் தண்டகவனத்தில் இருந்தான் பின்னர் அகத்தியரைக் காணப்புறப்பட்டான். இதனைக் கம்பன் "ஐந்தும் ஐந்தும் அமைதியின் ஆண்டு அவண் மைந்தர் தீது இலா வைகினர்" என்பான்.

தண்டகவனத்து முனிவர்களின் பத்து ஆசிரமங்களில் முறையாகத் தங்கியிருந்து ஐந்து ஆண்டுகளை இராமன் கழித்தான் என்றும், மீண்டும் இரண்டாவது வட்டமாக அவ்வாசிரமங்களிலேயே தங்கிப் பின்னும் ஐந்தாண்டுகள் கழித்தான் என்று வால்மீகி கூறுவார்.

இங்கு இராம இலக்குவரை மைந்தர் என கம்பன் குறிப்பிடுவான். மைந்தர் என்றால் இங்கு பிள்ளைகள் என பொருள் கொள்ளக்கூடாது. வலிமை மிக்கவர் என பொருள் கொள்ளுதல் வேண்டும். மைந்து என்றால் வலிமை எனப்பொருள்.

மற்றொரு வார்த்தையை இங்கு கவனிக்க வேண்டும். அச்சொல் தீதிலர் என்பதாகும். அங்கு பத்து ஆண்டுகள் எவ்வித தீதும் துன்பமும் இல்லாமல் வாழ்ந்தார்கள் என்பான் கம்பன். பின்னர் அவர்களுக்கு தீது வரப்போகிறது என்பதைக் குறிப்பால் கூறுகிறான் கம்பன்.

சிலப்பதிகாரத்தில் ஒரு காட்சி! கோவலனுக்கும் கண்ணகிக்கும் திருமணம். அத்திருமணத்தைக் காணவந்தவர்கள் மணமக்கள் மீது மலர்களைத் தூவி என்றும் பிரியாமல் இணைந்த கை ஞெகிழாமல் நீங்கள் வாழ்வீராக என்று வாழ்த்துகின்றனர்.

*காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்*
*தீது அறுக! என ஏத்தி சின்மலர் கொடுதூவி*

என்பார் இளங்கோவடிகள். வாழ்த்து எதிர்மறையில் அமையக்கூடாது என்பது அடிகளாருக்குத் தெரியாதா? இதையே உடன் பாட்டு முறையில் கூறியிருக்கலாமே!

காதலர் பிரியாமல் என்பதை காதலர் இணைந்து என்று கூறியிருக்கலாம். கவவுக்கை நெகிழாமல் என்பதைக் கவவுக்கை கவ்வினவாய் என்று பாடியிருக்கலாமே! அதேபோல் தீதறுக என்பதை நன்மை பொலிக என்று வாழ்த்தியிருக்கலாமே! ஏன் அவர் உடன்பாட்டு முறையில் வாழ்த்தை அமைக்கவில்லை?

இவ்விருவரும் நீண்டநாள் இணைந்து வாழப்போவதில்லை, விரைவில் பிரியப்போகிறார்கள் தழுவியுள்ள கை ஞெகிழப்போகிறது. இவர்கள் வாழ்வில் தீமையே விளையப்போகிறது என்று பின்னால் நிகழப்போவதை முன்னாலேயே குறிப்பால் உணர்த்துகிறார்.

இதேபோல்தான் கம்பரும் வரப்போகும் தீங்கினை முன்கூட்டியே குறிப்பால் உணர்த்துகிறார்.

அவர்கள் மலைகளிலும், மூங்கில்கள் நிறைந்த காடுகளிலும் செல்லுகின்ற சிறிய வழியை மெல்ல மெல்ல நடந்து கடந்தனர் அவ்வாறு நடந்தவர்கள் சுதிக்கணன் தங்கியுள்ள சோலையைச் சென்று அடைந்தனர். எத்தகைய சுதிக்கணன் அவர்? சுடரும்மேனி சுதிக்கணனாம். தவத்தின் பெருமையால் அவர்மேனி ஒளிவிசிக் கொண்டிருந்ததாம்.

*விடரகங்களும் வேய்செறி கானமும்*
*படரும் சில்நெறி பைப்பைய நீங்கினார்*
*சுடரும் மேனிச் சுதிக்கணன் என்னும் அவ்*
*இடர் இலான் உறை சோலை சென்று எய்தினார்* ( 2657)

விடரகம் - மலை; கானகம் - காடு அவர்கள் மலைகளிலும் காடுகளிலும் செல்கின்றனர். விடரகங்கள் கானமும் என்பதற்கு இடையில் வேய்செறி என்ற வார்த்தைகளைக் கம்பன் போடுவான். ஏன்? மலைகளிலும் மூங்கில்கள் செறிந்திருக்கும் கானகத்திலும் மூங்கில்கள் செறிந்திருக்கும் என்பதற்காக வேய்செறி என்பான் . இரண்டிற்கும் பொருந்துமாறு இடையில் அவ்வார்த்தைகளைச் சொல்லும் கம்பனின் திறம்தான் என்னே!

இதனை தாப்பிசைப் பொருள்கோள் என்பர். செய்யுளின் நடுவில் நிற்கும் மொழி முதலிலும் இறுதியில் உள்ள மொழிகளுடன் பொருந்திப் பொருள் தருவது தாப்பிசைப் பொருள்கோள் ஆகும் . இதனை அணிநூலார் இடைநிலை விளக்கம் என்பர். வடநூலார் இதனை மத்திய தீபம் என்பர். ஊஞ்சல் போல் இருமங்கும் செல்லும் சொல் என்பதாகும். (தாம்பு - ஊஞ்சல்)

*உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண*
*அண்ணாத்தல் செய்யாது அளரு.* - *குறள் 256*

இத்திருக்குறளில் நடுநின்ற ஊன் என்ற சொல் ஊன் உண்ணாமை என முதலிலும் ஊன் உண்ண எனப் பின்னும் சென்று கூடுதலை அறியலாம்.

சின்னெறி என்பது சிறுமையைக்குறிக்கும். குடத்தினும் பிறகலத்தினும் இருந்த நீரைச் சிறிது என்னாது சில என்னும் வழக்கு இருந்தது. ( தொல் - சொல் - கிளவியாக்கம் சேனாவரையர் உரை ) அதேபோல சிறுநெறியை சின்னெறி என்றார்.

*படுத்து வைத்தன்ன பாறை மருங்கில்*
*எடுத்து நிறுத்தன்ன விட்டருஞ் சிறுநெறி*

என்பார் மலைபடுகடாம் ( 15, 16) ஆசிரியர்.

அவர்கள் எப்படிப் போனார்கள்? 'பைப்பய' போனார்கள் பையப்பைய என்பது மருவி பைப்பய ஆனது. பையப்பைய சென்றனர் – மெதுவாகச் சென்றனர் ஏன்? அவ்வழி கல்லும் முள்ளும் நிறைந்து நடப்பதற்கு கடினமானது. அவ்வழியில் மெல்லியல் நல்லாளோடு செல்லும்போது வேகமாகவா நடக்க முடியும்! ஆகவேதான் பைப்பய சென்றனர்.

பிற்காலக்கவிஞன் இதனை 'தாழையாம் பூ முடித்து தடம்பார்த்து நடைநடந்து' என்று பாடுவான். முதலில் தலைவன் சொல்வான். அவன் வைத்துச் சென்ற அடியின் மேலே அவன் மனைவி கால்வைத்து நடப்பாளாம்! ஏன்? தலைவன் காலடி வைக்கும் போது கீழே முள், கல் உள்ளதா எனப் பார்த்துச் செல்வான். இருந்தால் அதனை எடுத்து எறிந்து விட்டுச் செல்வான் தன் தலைவிக்கு ஊறு நேர்ந்து விடக்கூடாது என்பதில் அவன் மிகவும் கவனமாகச் செல்வான்.

சுதிக்கணனை அவ்விடத்தே கண்ட இராம இலக்குவர் அவன் சிவந்த திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். அம்முனிவன் 'இங்கே தங்குக' என்று இனிய மொழிகளால் கூறினான்.

*அருக்கன் அன்ன முனிவனை அவ் வழி*
*செருக்கு இல் சிந்தையர் சேவடி தாழ்தலும்*
*"இருக்க ஈண்டு" என்று இனியன் கூறினான்*
*மருக்கொள் சோலையில் மைந்தரும் வைகினார் ( 2658)*

இங்கு இராம இலக்குவரை செருக்கு இல் சிந்தையர் என்கிறான் கம்பன். தாங்கள் பெரிய மன்னனுடைய குமாரர்கள் என்ற செருக்கு இல்லாமல் இருந்தனராம்.

செருக்கு என்பதற்கு தருக்கு எனப்பொருள் கொண்டு மிகப்பெரிய முனிவராகிய அகத்திய முனிவரை வணங்கிச் செல்கின்ற தாங்கள், அவருடைய மாணவராகிய சுதிக்கணனையும் வணங்க வேண்டுமோ? என்ற தருக்கு- கர்வம் இல்லாமல் இருந்தனர். ஆகவே முனிவர் சேவடி தாழ்ந்தனர் என்று கம்பன் பேசுவான்.

அவ்வாறு தங்கியிருந்த பொழுது சுதிக்கணன் அவர்களுக்குப் பருகநீரும் உண்ணக் கனியும் கொடுத்து வழி வந்த வருத்தத்தை மாற்றினார். பின்னர் இராமனிடம் " இவண் செல்வ! நீ எய்த யான் செய்தது எத்தவம்?" என்றனன்.

யாரும் இறைவனை நாடித்தான் செல்வர் ஆனால் இங்கு

பக்தனை நாடி இறைவன் வருகின்றான் என்றால் அவனுடைய எளிவந்த காட்சியை என்னவென்று சொல்வது!

இதேபோல் பாரதத்திலும் ஒரு காட்சி! கண்ணன் துரியோதனனிடம் தூது செல்கின்றான். அவனுடைய தாமரை அடிகள் அத்தினாபுர வீதிகளில் பதிந்து செல்கின்றன. விதுரனை நாடி கண்ணன் செல்கின்றான் விதுரன் மாளிகையில் நுழைகின்றான் கண்ணனைக் கண்டவிதுரனுக்கு மட்டற்ற மகிழ்ச்சி! "என்ன மாதவம் செய்தது இக்குடில்" என்றான்.

பெரியபுராணத்திலும் இதுபோன்ற காட்சி ஒன்றைப் பார்ப்போம் சிறுத்தொண்டர் சிவனடியாரைத்தேடி ஊரெல்லாம் அலைகிறார். ஆனால் இறைவனோ சிறுதொண்டரின் வீடுகேட்டு அவன் இல்லம் வருகின்றான்.

இறைவனை நோக்கி நாம் இரண்டடி சென்றால் அவன் நம்மை நோக்கி நான்கடி வருவான். பக்தனுக்கு மயங்காத இறைவனா? இவ்வாறு இறைவன் நம்மைத்தேடி வருவதை ஒரு கவிஞர்

*தன்னந் தனியே மூலையிலே*
*தனியே பாடிக் கொண்டிருந்தேன்*
*என்றன் இசையுன் செவியினிலே*
*இனிதே சென்று பட்டவுடன்*
*இறைவா என்றன் வாசலிலே*
*இறங்கி வந்தே நிற்கின்றாய்*

என்று பாடுவார் ( தாகூரின் கீதாஞ்சலி - வே.இரா.சிவஞானவள்ளல்.)

அதற்கு இராமன் ஆன்றோர்கள் சிறப்பித்துச் சொன்ன நான்முகன் மரபில் தோன்றினவர்களாகிய அந்தணருள் உயர்ந்த தவத்தை முற்றும் பெறச் செய்தவர்கள் உன்னைவிடச் சிறந்தோர் யாரும் இல்லை. நற்குடிப் பிறந்தவர்களுள் உனது அருளைப் பெற்ற என்னைவிடச் சிறந்தோர்யாரும் இல்லை என்றான்.

*சொன்ன நான்முகன் தன்*
*வழித் தோன்றினர்*
*முன்னையோருள் உயர்*
*தவம் முற்றினார்*
*'உன்னின் யார் உளர்!*
*உன் அருள் எய்திய*
*என்னின் யார் உளர்*
*இற் பிறந்தார்?' என்றான்*

நீ வர யான்செய்த தவம் யாதோ எனக்கூறிய சுதிக்கணனுக்கு மகிழ்ச்சி உண்டாகுமாறு 'உயர்தவம் முற்றினார் உன்னின் யார் உளர்?' என்றான் அம்முனிவரையே மிக உயர்த்திக் கூறிய இராமனின் மனப்பாங்கினை என்னென்று கூறுவது?

இக்காலத்தில் அவ்வாறு புகழ்ந்து கூறினால் புகழைப் பெறுபவனுக்குத் தலைகால் புரிவதில்லை. ஒரு பேச்சுக்குச் சொன்னால் கூட தான்தான் பெரியவன் தனக்குதான் எல்லாம் தெரியும் தன்னை விட மற்றவர்களெல்லாம் இப்புகழுக்குத் தகுதி படைத்தவர்கள் அல்லர் என நினைக்கின்றனர்.

அதுமட்டுமா! தன்னைப் பற்றி ஒருவர் சிறப்பித்துக் கடிதம் எழுதிவிட்டால் ஊரெல்லாம் அதனைக் காட்டிப் பெருமையடித்துக் கொள்கிறார்கள். தன்னுடைய படைப்பு இதழ்களில் வந்துவிட்டால் எல்லாரிடமும் காட்டி பெருமையடித்துக் கொள்கிறார்கள். அமைப்புகளை தொல்லைபடுத்தி தனக்கு விருது வழங்கும்படி ஏற்பாடுசெய்து தனக்கு அவர்களே வலிய வந்து விருது கொடுத்தார்கள் என்று பாவனை காட்டி பெருமையடித்துக் கொள்கிறார்கள். இவர்களெல்லாம் இவ்விரு பாடல்களைப் படிக்க வேண்டும். இல்லையில்லை மனப்பாடமே செய்ய வேண்டும். அப்பொழுதாவது அவர்கள் தலைகணம் குறைகிறதா பார்ப்போம்.

தனக்குவமை இல்லாத இராமன் இவ்வாறு கூறியதைக் கேட்டதும் முனிவன், ' நல்ல விருந்தினன் ஆகி என்னால் இதுவரை அமைந்துள்ள என் தவப்பயன்கள் எல்லாவற்றையும் நீ ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்றான். தமது நற்செயல்களைப் பெரியோர் ஆண்டவனுக்குக் காணிக்கை ஆக்குவதை சாத்விகத் தியாகம் என்பர். பெரியோர்க்கு அன்பால் அளிக்கும் கையுறைப் பொருளை தக்கணை என்ற பெயரால் வழங்குவர்.

கொடுப்பது என்பது எல்லாருக்கும் வராது! பொருள் இருந்தாலும் கொடுப்பதற்கு மனம்வர வேண்டும். வலதுகை கொடுப்பது இடதுகைக்குத் தெரியாமல் இருக்க வேண்டும்.

இன்று கொடுப்பவர் குறைவு அதிலும் பலனை எதிர்பாராமல் விளம்பரம் இல்லாமல் கொடுப்பவர் மிகமிகக் குறைவு.

இக்காலத்தில் ஒரு குழல் விளக்கைக் கொடுத்தாலும் அதனை மறைப்பதுபோல் அதன்மேல் தன்பெயரை எழுதித் தருகின்றனர். கொடுப்பதெல்லாம் விளம்பரத்தையும், பயனையும் எதிர்பார்த்துதான்.

என் நண்பர் ஒருவர் மலர் ஒன்று வெளியிட திட்டமிட்டு

விளம்பரத்திற்கு பலரை நாடிச்சென்றார். அருகிலுள்ள நகரத்திற்கு நண்பர்கள் குழாத்துடன் சென்றார் பலர் ‘ உங்களுக்கு விளம்பரம் கொடுப்பதில் என்ன லாபம்! இங்கு உள்ளூரில் கொடுத்தால் எங்களுக்கு ஊரில் விளம்பரம் ஆகும் பொருள்கள் எடுக்க எங்கள் கடைக்கு வருவார்கள் என்றார். பாவம் நண்பர் முகம் சோர்ந்துவிட்டது.

ஒருமுறை நானும் நண்பரும், அவர் ஏற்பாடு செய்துள்ள பட்டிமண்டபத்திற்கு நன்கொடை வசூலிக்கச் சென்றோம். பக்கத்து ஊரிலுள்ள ஒரு நண்பருடன், ஒரு அரசியல் பிரமுகரிடம் சென்றோம். நண்பர் தாங்கள் வந்த செய்தியைச் சொன்னார். அந்த அரசியல் அன்பர் சிறிது பொருள் ஈந்தார்.

நான் அதிர்ச்சியடைந்தேன். நண்பர், ‘என்ன ஐயா இவ்வளவு குறைவான தொகையைக் கொடுக்கிறீர்களே’ என்றார். ‘அவரோ உங்களுக்குக் கொடுப்பதில் எனக்கென்ன லாபம்? உள்ளூரில் கொடுத்தால் ஓட்டுவிழும்’ என்றார். நண்பர் முகத்தில் ஈயாட வில்லை. என் முகத்திலும்தான்!

இப்படிப்பட்டவர்களால் இலக்கியம் வாழுமா? வீழும்! நல்லசெயல்களும் நடவா!

எங்களூருக்குப் பக்கத்தில் படவேடு என்ற ஊர் உள்ளது. சம்புவராயர்கள் கோட்டை கட்டி ஆண்ட ஊர் அது. அங்கு கோயில்கள் அதிகம்! வரலாற்று சிறப்புமிக்க கோயில்கள். அவை பெரும்பாலும் சிதைந்தும் மண்மேடிட்டும் கிடந்தன. அவற்றையெல்லாம் கோடிக்கணக்கில் பழுதுபார்த்தும் புதையுண்ட கோயில்களை அகழ்ந்தெடுத்துப் புதுப்பித்தும் வருகிறார் ஒரு செல்வந்தர்! ஒரு வள்ளல்! ஆனால் எங்கேயும் அவர் பெயரைப் பார்க்க முடியவில்லை தன்பெயரைச் சொல்லாமலே தன் பணியைத் தொடர்கிறார். ‘கடைமையைச் செய். பலனை எதிர்பாராதே’ என்ற கீதைக்குச் சான்றாக விளங்குகிறார். இவரைப் போல் ஒரு சிலர்தானே இருக்கிறார்கள் . இவர்களால்தான் இலக்கியமும் பக்தியும் வளரும். இக்குறிப்பை எழுதியதுகூட அவருக்குப்பிடிக்காது. இருப்பினும் சொல்லாமல் இருக்க முடியவில்லை!

முனிவன் இவ்வாறு கூறியதும் இராமன், ‘இறைவனே நின்னுடைய அருள் எத்தகைய பெரிய தவத்திற்கும் எளிதாகுமோ! யான் சொல்லத்தக்கது இங்கு ஒன்றுண்டு அகத்திய முனிவனைக் காண்பதாகிய ஒரு காரியம் இனி இருக்கின்றது’ என்று கூறினான்.

*மறைவலான் எதிர்*
*வள்ளலும் கூறுவான்*

*இறைவா! நின் அருள் எத்*
*தவத்திற்கு எளிது?*
*அறைவது ஈண்டு ஒன்று*
*அகத்தியற் காண்பது ஓர்*
*குறை கிடந்தது இனி* (2662)

எனக் கூறினான்

கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தது கொள்ளேன் எனல் அதனினும் உயர்ந்தது. ஆனால் இராமன் நாகரீகம் தெரிந்தவனல்லவா? வேண்டாம் என்று கூறினால் முனிவன் மனம் புண்படுமல்லவா? அதனால்தான் உம்அருள் எத்தவத்தாலும் அடைதற்கு எளிதன்று அதனை உம்மால் நான் எளிதில் அடைந்தேன் இப்பொழுது அகத்தியரைக் காணவேண்டும் என்றான் வான்மீகத்தில் இராமன் என் முயற்சியாலேயே தவப்பயனைப் பெற விரும்புகிறேன் என்ற கருத்தைக் கொண்டே " நின் தவம் எத்தவத்திற்கு எளிது " எனக் கூறியதாகவும் கொள்வர். கம்பன் என்றால் கம்பன்தான்.

முனிவனும் ' நீ நல்லதே நினைத்தாய் அது நானும் முன்னமே சொல்லத் துணிந்ததே! அவ்விடத்திற்குச் செல்லுக, அம்முனிவனை அடைவாயாக அடைந்தப்பின் நின்னிடத்து அடையாத நன்மைகளே இல்லை' என்றான்.

'அது அன்றியும் நின்னுடைய வரவை விரும்பி இன்றுவரையில் எதிர்பார்த்து நின்று அகத்தியன் மகிழ்ச்சியுறு கின்றான். ஆகவே நீ சென்று அவனை அடைவாயாக! செவ்வியோய் ! நீ அம்முனிவனைச் சேருதல் தேவர்க்கும் நல்லது, மற்றை யாவர்க்கும் நல்லதே' என்றான்.

அகத்தியன்பால் பெறும் வில்லையும் அம்புகளையும் கொண்டு இராமன் இராவணன் முதலியோரைக் கொல்லப போகின்றான். ஆகவே அவ் அரக்கனால் வரும் துன்பம் நீங்கித் தேவரும் மற்றையாவரும் இன்பம் எய்துவர் என்ற கருத்தில் தேவர்க்கும் யாவர்க்கும் நன்று என முனிவன் கூறினான்.

இராம இலக்குமணர் அத்தவ முனிவனின் தாமரை மலர்போன்ற திருவடிகளைத் தொழுதுவிட்டு தேனடையைப் பிழிந்தெடுத்த தேனைப் போல இனிய சுவையோடு விளங்கும் அருவித்திரள்கள் பொழிகின்ற அகத்திய முனிவரின் சோலைக்கு விரைவாகச் சென்றனர்.



# இளைய மென்கொடி

ச.மணிஅரசு பி.எஸ்.சி., கண்ணமங்கலம்.

கம்பஇராமாயணத்தில் தசரதனை அனைவரும் அறிவோம். ஆனால் அவன் மனையில் மூன்றாவதாக இடம் பிடித்த சுமத்திரையை அதிகம் காட்டாமல் கடுகளவு இடம் கொடுத்தாலும் ஆழமான பாத்திரமாகவே அவளை தனது காவியத்தில் கம்பன் காட்டியுள்ளான். அவள் ஒரு உன்னதமான படைப்பு என்றே கூறலாம்.

இவள் இலக்குவனையும், சத்துருகனையும் ஈன்ற பெருமைக்கு உரியவள். சுமத்திரை அடக்குமும், உயர்ந்த பண்பும் கொண்டவள், சாந்தகுணம் நிறைந்தவள். இவள் பொறுமை மிக்கவள். இலக்குவனோ இவள் குணத்துக்கு எதிரானவன்.

கம்பன் சுமத்திரையை இளைய மென்கொடி என்று பாடியதாலோ என்னவோ தசரத மன்னன் யாக சாலையில் கிட்டிய அவியுணவை முறையே கோசலை, கைகேயி, சுமத்திரை ஆகிய மூவருக்கும் கொடுத்தான். மீதமுள்ள அவியுணவை மீண்டும் சுமத்திரைக்கே கொடுத்து மகிழ்ந்தான்.

சுமத்திரைக்கும், கோசலைக்கும் இணைப்பிரியாத நெருக்கம் உண்டு. இராமனுக்கு முடிசூட்ட போகிறார்கள் என்ற செய்தியை தோழி மூலம் அறிந்த கோசலை, உடனே சுமத்திரையை அழைத்துக் கொண்டு திருமாலை வழிபட சென்றாள் என்று அவர்களுக்கு உள்ள நெருக்கத்தைக் காட்டுகிறான் கம்பன்.

இராமன் மீது மிகுந்த பாசம் வைத்திருந்த கைகேயி, கூனியின் திறமையான பேச்சினாலும், சூழ்ச்சியாலும் மனம் கலைந்தாள். தசரதன் தனக்கு கொடுத்த இரண்டு வரங்களைக்கொண்டு இராமன் காட்டுக்கும், தன் மகன் பரதன் நாடாளவும் வேண்டும் என்ற தன்னுடைய எண்ணத்தை மன்னனின் கட்டளை இது என்று கூறியதை ஏற்ற இராமன் தன் இளையவனுடன் சுமத்திரையை காணச் சென்றான்.

அவர்களைக் கண்ட சுமத்திரை மனம் தாளாமல் அழுதாள், புண்பட்ட நெஞ்சுபோல் துடித்தாள், தரையில் புரண்டாள். அப்பொழுதே இலக்குவனும் உடன் செல்ல வேண்டியவனே, அதுவே அவனுடைய விருப்பமாகவும் இருக்கும் என்று உணர்ந்தாள்.

இராமனுக்கு அளிக்கப்பட்ட மரவுரிகளை தன் மகனுக்கு அளித்தாள். அவன் தாயின் காலில் விழுந்து வணங்கினான். அப்பொழுது சுமத்திரை இவன் ஏன் காட்டுக்குச் செல்ல வேண்டும்;

இராமனுக்கு மட்டும் தானே அந்த கட்டளை என்று எண்ணாமல் மாறாக இலக்குவனை நோக்கி

*ஆகாதது அன்றால் உனக்கு; அவ் வனம் இவ் அயோத்தி;*
*மா காதல் இராமன் நம் மன்னவன்; வையம் ஈந்தும்*
*போகா உயிர்த் தாயர் நம் பூங் குழல் சீதை - என்றே*
*ஏகாய்; இனி, இவ் வயின் நிற்றலும் ஏதம்' என்றால் (1752)*

மகனே! இராமன் எந்த கானகத்துக்குச் செல்கின்றானோ அந்த வனமே உனக்கு அயோத்தி, தந்தை மன்னன் இராமனே, தாய் சீதையே என்று எண்ணிக் கொண்டு தாமதம் செய்யாமல் உடனே அவனுடன் செல் என்று கூறினாள். இலக்குவன் வனம் செல்ல வேண்டிய கட்டாயம் இல்லை என்றாலும் அவனுடன் நீ செல்ல வேண்டும் என்று கூறியதுடன் அல்லாமல் தாய், தந்தை மன்னன் அனைத்தும் இனிமேல் உனக்கு இராமன்தான் என்று கூறியதன் மூலம் அவளுடைய பெருந்தன்மை வெளிப்படுகிறது. அத்துடன் நில்லாமல்

*பின்னும் பகர்வாள், மகனே! இவன்பின் செல்; தம்பி*
*என்னும்படி அன்று, அடியாரினின் ஏவல் செய்தி;*
*மன்னும் நகர்க்கே இவன் வந்திடின், வா; அது அன்றேல்*
*முன்னம் முடி என்றனள், வார் விழி சோர நின்றால். (1751)*

இராமனுடன் நீ தம்பி என்ற உறவில் செல்லாதே, அவனுக்கு பணி செய்யும் ஏவல் ஆளாய் இரு, தம்பி என்றால் அவனுக்கு பணிவிடைகள் செய்ய முடியாது இராமனுக்கு பணியாளாய் இருந்தால் தான் அவனுக்கு பணிகள் செய்ய முடியும் என்ற சுமத்திரையின் முன்யோசனையை பாராட்ட வேண்டும். அதோடு நிறுத்தவில்லை அவள் இராமன் எப்பொழுது நாடு திரும்புகிறானோ அப்பொழுதுதான் நீயும் திருப்ப வேண்டும். வனம் எனக்கு பிடிக்கவில்லை என்று இடையில் அவனை விட்டுவிட்டு திரும்பிடாதே என்று கூறாமல் அவன் எப்பொழுது வருகிறானோ அப்பொழுது வா என்று கூறியதில் அவளுடைய அறிவை கம்பர் அழகாக வெளிப்படுத்துகிறார்.

இராமனுக்கு வனத்தில் ஏதாவது துன்பம் நேர்ந்தால் அவனுக்கு முன் உன் உயிர் பிரிய வேண்டும் என்று கூறியதனால், இராமனின் மீதுள்ள பாசமும், அவளுடைய தியாக உள்ளமும், எந்த தாய்க்கும் இல்லாத வீரப் பண்பையும் காவியத்தில் கம்பன் கூறுகிறான். அவள் அவ்வாறு கூறியதற்கு இராமன் மீதுள்ள பாசம்

ஒரு காரணம் என்றாலும், இலக்குவனுக்கு பழிச்சொல் வந்துவிடக்கூடாது என்ற எண்ணத்திலும் இருக்கலாம் அல்லவா? இராமனுக்கு துன்பம் நேர்ந்து இவன் மட்டும் நாடு திரும்பினால் நாட்டு மக்கள் இவனை பழிப்பார்கள் என்ற அச்சமும் சுமத்திரைக்கு இருந்திருக்கலாம். அதனால் தான் அவனுக்கு முன் உன் உயிர் பிரிய வேண்டும் என்று கூறினாள்.

சுமத்திரை, கோசலையை போல் மேலான பண்புகள் கொண்டவள். கோசலைக்கு ஆறுதல் அளித்தவள் சுமத்திரை மட்டுமே. பெண்மை நலத்தோடு பிறநல்லியல்பும் கொண்ட சுமத்திரை 'அரசும் வாழ்வும் ஆளப்பிறந்த கைகேயிக்குக் கொடுத்தோம். வையக வாழ்வை இழந்த நாங்கள் வானுலகம் செல்ல வழி தெரியாமல் திகைக்கின்றோம்' என்று தன்னுடன் கோசலையும் இணைத்துக்கூறி வருந்தினாள்.

இலக்குவனுக்கு கிடைத்த பெருமைகள் அனைத்தும் சுமத்திரையினால் கிடைத்தது என கூறலாம். ஏனென்றால் இராமன் காட்டுக்குச் செல்லும் போது இவனை போகவிடாமல் தடுத்திருக்கலாம், அவ்வாறு தடுத்து இலக்குவனும் இராமனுடன் செல்லாமல் இருந்திருந்தால் இலக்குவனை இந்த உலகம் அவ்வளவாக அறிந்திருக்க வாய்ப்பில்லாமல் இருந்திருக்கும். இது சுமத்திரையினால் இலக்குவனுக்கு கிடைத்த பெருமை, ஆனால் சத்ருகனுக்குக் கிடைக்கவில்லை. சுமத்திரை இலக்குவனை வனவாசத்திற்கு அனுப்பாமல் இருந்திருந்தால் இராமன் - இலக்குவன் என்ற சகோதர வார்த்தையே வழக்கத்தில் இருந்திருக்காது. இராமாயணத்தின் கதையே கூட மாறியிருக்கலாம்.

சுமத்திரையானவள் காவியத்தில் மிகப்பெரிய பங்கு வகிக்கிறாள். இராமன் மீது வைத்திருந்த பாசத்தின் காரணமாகவே இலக்குவனை அவனுடன் சுமத்திரை அனுப்பி இருந்தாலும், அது இலக்குவனுக்குப் பெருமை சேர்ப்பதாகவே அமைந்தது எனலாம். சுமத்திரை மிக உயர்ந்த எண்ணங்களைக் கொண்டவள் என்று கம்பன் தனது காவியத்தில் அழகாக எடுத்துக்காட்டுகிறான்.



# கம்பன் கழகங்கள்

கம்பன் கழகம்
கம்பன் மணிமண்டபம்
காரைக்குடி – 632 002

கம்பன் கழகம்
பெருமாள் கோயில் வடக்கு வீதி
தேரமுந்தூர் – 609 808

கம்பன் கழகம்
கம்பன் அருட்கோயில்
நாட்டரசன்கோட்டை – 630 556

கம்பன் கழகம்
6,202, ஆலடிப்பட்டி
நல்லூர் அஞ்சல் – 627 853
நெல்லை மாவட்டம்

கம்பன் கழகம்
12, தாண்டல் கந்தசாமி ராஜா தெரு
இராஜபாளையம் – 626 117
தொபே 04563 – 231592

கம்பன் கழகம்
10, பெரிய அக்ரகாரம்
இராசிபுரம் – 637 408
நாமக்கல் மாவட்டம்
தொபே 220373

கம்பன் நற்றமிழக் கழகம்
கண்டாச்சிபுரம் – 605 701
விழுப்புரம் மாவட்டம்.

கம்பன்கழகம்
பூர்ணிமா, 22, இராஜாஜி தெரு
கரூர் – 639 601

கம்பன் கழகம்
ஸ்ரீராமவின்னகரம்
கள்ளிப்பட்டி – 638 505
ஈரோடு வழி

கம்பன் கழகம்
வரதராம் கோ
134, திருக்கச்சிநம்பி தெரு
காஞ்சிபுரம் – 631 503
தொபே 223486, 224142

கம்பன் கழகம்
ஸ்ரீ இராம கான சங்கீத சபா
50 /41, ஈரோடு மெயின்ரோடு
கோபிசெட்டிபாளையம் – 638 476

கம்பன் கழகம்
மணிபீடர் பள்ளி
பாப்பநாய்க்கன்பாளையம்
கோயம்முத்தூர் – 641 037

கம்பன் கழகம்
5, பேட்டைபாக்கியநாதன் தெரு
தஞ்சை மெயின்ரோடு
கும்பகோணம்

கம்பன் கழகம்
ஏ.வி.எம். ஸ்டுடியோ
38, ஆற்காடுசாலை
சென்னை – 600 028

கம்பன் கழகம்
104, சாலை ரோடு
சேலம் –1

கம்பன் கழகம்
390, அப்துல் வகாப்நகர்
இராமநாதபுரம் அஞ்சல்
மருத்துவக்கல்லூரி வழி
தஞ்சாவூர் – 613 004

கம்பன் கழகம்
55, சேதுராமபிள்ளை காலனி
திருச்சி – 620 020

கம்பன் கழகம்
61.1. கிழக்கு முனியப்பன் கோயில் தெரு
திருசெங்கோடு – 627 211
தொபே 04288 – 283463, 283763

கம்பன் கழகம்
90, ஆஸ்பத்திரி தெரு
திருத்துறைப்பூண்டி – 614 713
திருவாரூர் மாவட்டம்

கம்பன் கழகம்
23,24 அன்னதான விநாயகர் கோயில்
தெரு
பேட்டை, திருநெல்வேலி – 627 004

கம்பன் கழகம்
62, கச்சேரித் தெரு
திருப்பத்தூர் – 635 601

கன்னியாகுமரி மாவட்டக்
கம்பன் கழகம்
3/1, கீழத் தெரு
நாகர்கோயில் – 629 001

கம்பன் கழகம்
119, சின்னையாதெரு
பட்டுக்கோட்டை – 614 601

கம்பன் கழகம்
காசிகார்ட்ஸ்
ஞான அருள் பிளாசா
3075 கீழராஜ வீதி
புதுக்கோட்டை – 622 001
தொபே 04322 – 227211

கம்பன் கழகம்
57, கடைவீதி
பெரம்பலூர் – 621 212
தொபே 277835

கம்பன் கலை மன்றம்
1/6 தமிழ்நாடு வீட்டு வசதி வாரிய
குடியிருப்பு, உடுமலை சாலை
மாக்கினாம்பட்டி அஞ்சல்
பொள்ளாச்சி – 642 003

கம்பன் கழகம்
11, குறள்நகர்
மதுரை – 18
0427 – 2262211

கம்பன் கழகம்
201, பிள்ளையார் கோயில் தெரு
வாழியூர்
(வழி) ஒண்ணுபுரம் – 632 315
தி.மலை.மாவட்டம்
தொபே 04173 – 243724

கம்பன் கழகம்
55 /23 அறிஞர் அண்ணா மேலத் தெரு
விழுப்புரம் – 605 602

வேலூர் கம்பன் கழகம்
2, 4வது குறுக்குத் தெரு
கோபாலகிருஷ்ணநகர்
வேலூர் – 632 006

கம்பன் கழகம்
வையப்பமலை – 637 410
நாமக்கல் மாவட்டம்

கம்பன் கழகம்
அவினாசி

கம்பன் கழகம்
இராமேஷ்வரம்

கம்பன் கழகம்
கல்கத்தா

கம்பன் கழகம்
சிவகங்கை

கம்பன் கழகம்
சீர்காழி

கம்பன் கழகம்
கவுந்தபாடி
(வழி) ஈரோடு

கம்பன் கழகம்
திருமங்கலம்

கம்பன் கழகம்
திருமயம் – 622 507

கம்பன் கழகம்
தென்திருப்பேரை

கம்பன் கழகம்
நாமக்கல் – 637 001

கம்பன் கழகம்
பரமக்குடி

கம்பன் கழகம்
புதுச்சேரி

மலேசியா கம்பன் கழகம்
மலக்கா, மலேசியா

அகில இலங்கை கம்பன் கழகம்
யாழ்பாணம்.



## கம்பன் ஆய்வுகள் ( 1995 லிருந்து )
## நூல் ஆசிரியர், வெளியீடு, இடம், பக்கம்

**1995**

1. இராமாயணத்தில் தம்பியர், தி.வே.கோபாலையர், வானதி பதிப்பகம், சென்னை, 158

2. கண்டேன் கம்பனை, லோகாம்பாள் சுந்தரம் விஜயா பதிப்பகம், கோவை VIII + 116

3. கம்பநாடகம், தமிழண்ணல், வானதி பதிப்பகம், சென்னை VII + 132

4. கம்பமலர், அகில இலங்கைக் கம்பன் கழகம், யாழ்ப்பாணம்

5. கம்பர் ஆய்வுக்கோவை, மு.சாயபுமரைக்காயர் (தொகு) கங்கை புத்தக நிலையம், சென்னை, 359

6. கம்பர் தமிழ், செ.இராசு

7. கம்பன், கே.தங்கராசு, புகழ் நிலையம், சென்னை, 120

8. கம்பன் காப்பியம் கதை மாந்தர் கூற்று, அ.வே.சுப்பிரமணியன், தமிழரங்கம், புதுவை, 16 + 208

9. தமிழகத்தில் இராமாயணத் தாக்கம், இரா.பிரேமா மாதவி பதிப்பகம், சென்னை, VI + 88

10. இராமாயணம், கே.தங்கராசு,புகழ் நிலையம், சென்னை, 176

11. வாலி வதம், கோக்கலை ஜே.ராஜன் மகாராணி, சென்னை, 12 + 100

12. வாழ்வியலில் கம்பன், பெ.வேலு, கம்பன் கழகம், சேலம், 125

**1996**

13. இராமகாவியம், கிருபானந்த வாரியார் குகஸ்ரீவாரியார் பதிப்பகம், சென்னை, 366

14. இராமாயணத்தில் தம்பியர் – இரண்டாம் பகுதி தி.வே.கோபாலையர், வானதி பதிப்பகம், சென்னை, 170

15. கம்பன் – பாகம் 2 (நாடகம்), அனுமந்தபுரம் சு.இராமசாமி
முத்துப் பதிப்பகம், விழுப்புரம், 160

16. கம்பன் எடுத்த முத்துக்கள், அ.ச.ஞானசம்பந்தன்,
வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 329

17. கம்பன் கண்ட மாந்தர், ஜெ.ஸ்ரீசந்திரன்,
வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 373

18. கம்பன் கவிச்சோலையில். த.இராமலிங்கம்.
காமதேனு பப்ளிகேஷன்ஸ், சென்னை, 200

19. கம்பனும், கீதையும்,இளம்பிறை மணிமாறன்,
வானதி பதிப்பகம், சென்னை, 196

20. கவிச்சக்கரவர்த்தி கம்பர் வாழ்க்கை வரலாறு, மா.வரதராஜன்
மங்கையர்க்கரசி பதிப்பகம், காஞ்சிபுரம், 16 + 193

21. பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், ந.சுப்பு ரெட்டியார்
வானதி பதிப்பகம், சென்னை, 8 + 182

22. தேமாங்கனி, வாழியூர் வே.இராசவேலன்
பேரரசு பதிப்பகம், வாழியூர், 112

23. வ.வே.சு.ஐயர் கம்பராமாயணக் கட்டுரைகள், பெ.சு.மணி
(தொகு) பூங்கொடி பதிப்பகம், சென்னை, 16 + 284

**1997**

24. அழியா அழகு, இலங்கை ஜெயராஜ்
வானதி பதிப்பகம், சென்னை, 32 + 170 மறு பதிப்பு 1998

25. கம்பரின் அறிவியல், அ.அறிவுநம்பி,
புதுவை பல்கலைக் கழகம், புதுவை, 16 + 205

26. கம்பன் காட்டும் வளங்கள், மா.சின்னு, அகரம், கும்பகோணம் 128

27. கம்பனில் கம்பன், கா,வாசுதேவன், தேன் பதிப்பகம், திருச்சி, 14 + 120, ம.ப 2000

28. தமிழின் பொற்காலத்தில் ராமாநுஜரும் கம்பனும், (காலம் காலநிலை
ஆராய்ச்சி) கு.குலசேகரன், திருமகள் வெளியீடு, சென்னை 24 + 245

29. இராமாயண நாடகம், திருவாரூர் கே.தங்கராசு

30. இராமாயணம் காவியமா அல்லது வாழ்க்கைத் தத்துவமா?
ஆர்.ஏ.சுப்பிரமணியன், ஸ்ரீ செந்தில் பதிப்பகம், குடியாத்தம்

**1998**

31. கம்பர் + வள்ளலார் = ஆன்மநேயம், சோ.சத்தியசீலன்
வானதி பதிப்பகம், சென்னை

32. கம்பனில் புரட்சி, மு.சாயபுமரைக்காயர் (தொகு),
கங்கை புத்தக நிலையம், சென்னை, 26 +100

**1999**

33. கம்பர் கண்ட குகன், சரளா ராஜகோபாலன்,ஒளிப்பதிப்பகம், சென்னை, 124

34. கம்பர் சொன்ன கருத்துக் கதைகள், வேணு.சீனிவாசன்
அறிவாலயம், சென்னை.

35. கம்பர் படைத்த காவிய மாந்தர், கா.அ.ச.ரகுநாயகன்

36. கம்பனில் மனிதம், க.வாசுதேவன்,தேவன் பதிப்பகம், கும்பகோணம், 96

37. கம்பன் என்றொரு நிர்வாகி, பழ.பழனியப்பன்,
வானதி பதிப்பகம், சென்னை, 8 + 138 இ.ப,2000

38. கம்பனில் உவகை ஊட்டும் உணர்ச்சிகள்,
அ.வே.சுப்பிரமணியன், வானதி பதிப்பகம், சென்னை 7+ 212

39. சத்குரு கண்ட இராமன், சரஸ்வதி இராமநாதன்
வானதி பதிப்பகம், சென்னை, 172

40. திரிசடையும் ஒரு சடையும் வாழியூர் வே.இராசவேலன்
பேரரசு பதிப்பகம், வாழியூர், 96

**2000**

41. கம்பர் ரசித்த ராமாயணக் காட்சிகள், கே.தங்கராசு
பாரதி புத்தகாலயம், சென்னை

42. கம்பனில் பெண்ணியம், இரா.செல்வக் கணபதி
வானதி பதிப்பகம், சென்னை, 8 + 208

43. கம்பனில் மனிதம், சித்தன், திருவரசு புத்தக நிலையம், சென்னை, 204

44. சீதை என்றொரு.... பழ,பழநியப்பன் (கம்பனடிசூடி)
வானதி பதிப்பகம், சென்னை, 8 + 116

**ஆண்டு அறியப்படாதவை**

45. அவன் அமரன், அ.சீநிவாசராகவன், நதயுகப் பிரசுராலயம், சென்னை, 3 + 26

47. ஆழ்வார்களும் கம்பனும், எஸ்.கே. ராமராஜன்

48. இராமகாதை (மதிப்புரைகள்) கம்பர் பதிப்பகம், அமராவதி புதூர்,40, (சொ.முருகப்பாவின் தொகுப்பு நூலுக்கு அறிஞர் அளித்தவை)

49. இராமனைத் தரிசிப்போம் - கம்பன் கழகம், இராஜபாளையம்

50. இராமாயணத்தில் தலைமைப் பாத்திரங்கள், தி.வே.கோபாலையர் திருவரசு பதிப்பகம், சென்னை

51. இலங்கையில் கம்பராமாயண அடிச்சுவடுகள் (ஆராய்ச்சிப்பயணக் கட்டுரைகள்) பயணக்குழு, நெல்லை மாவட்டக் கம்பன் கழகம், பாளையங்கோட்டை.

52. உந்தும் உவகை, மு.மு.இஸ்மாயீல், திருவரசு புத்தக நிலையம், சென்னை.

53. கம்பச் சித்திரம் - சுந்தரகாண்டம், பி.ஸ்ரீ.நவபாரதி பிரசுராலயம் நெல்லை, 8 + 440

54. கம்பச் சுவை, சித்பவானந்தர் - 28

55. கம்பர் காவியம், ரா.இரா.கவையங்கார், பாரதி பதிப்பகம், சென்னை.

56. கம்பராமாயணத்தில் ஜனநாயகக் கூறுபாடுகள், சுப்பு ரெட்டியார், கம்பன் கழகம், சென்னை

57. கம்பராமாயணத் திறனாய்வு, புதுமைவாணன் (அருச்சுனன்)

58. கம்பராமாயணம் காமரசந்தானா? (சி.என்.அண்ணாதுரையின் கம்பரசம் என்ற நூலுக்கு மறுப்பு)

59. கம்பன் கண்ட சமரசம், மு.மு.இஸ்மாயீல், வானதி பதிப்பகம்,சென்னை.

60. கம்பன் கண்ட சமுதாயம், கம்பன் கழகம், பரமக்குடி

61. கம்பன் கவிதை, தொகுதி 2 (கட்டுரைகள்)
நவயுகப்பிரசுராலயம், சென்னை, 151 – 280

62. கம்பன் கவியரங்கில், மு.மேத்தா, பாரதி பதிப்பகம், சென்னை

63. கம்பன் கவியரங்கில் தமிழவேள்

64. கம்பன் கற்பகச் சோலை, கம்பன் கழகம், பரமக்குடி

65. கம்பன் காவியத்தில் வண்ணங்கள், சரசுவதி இராமநாதன், கம்பன் கழகம், பாளையங்கோட்டை, 96

66. கம்பன் காவியம் அன்றும் இன்றும் என்றும், பி.ஸ்ரீ.ஆச்சாரியா + சரசுவதி இராமநாதன், கம்பன் கழகம், பாளையங்கோட்டை.

67. கம்பன் புகழ், தமிழவேள்

68. கம்பனும் டி.கே.சி.யும், தோ.மு.பாஸ்கரத்தொண்டைமான். கம்பன் கழகம், காரைக்குடி.

69. கம்பனும் மில்டனும் ஒரு புதிய பார்வை, எஸ்.இராமகிருஷ்ணன், ஐந்திணை பதிப்பகம், சென்னை

70. கம்பனைத் தரிசிப்போம், கம்பன் கழகம், இராஜபாளையம்

71. கவி உலகில் கம்பன், ச.து.சு.யோகியார்

72. கோசலநாயகன், இரா.ஸ்ரீநிவாசன், கல்யாணி பதிப்பகம்,

73. சுடுசினத்த சூர்ப்பணகை, துரோணன், மணிவாசனர் பதிப்பகம், சென்னை

74. நவரசக் கம்பநாடகம், ஆ.கு.ஆதித்தர்

75. மந்தரை சூழ்ச்சி

76. ராமநாமத்தின் பெருமை, டி.அய்யாச்சாமி, கம்பன் கழகம், பாளையங்கோட்டை

77. வ.வே.சு.ஐயர் வாழ்க்கை வரலாறும் கம்பராமாயணச் சிந்தனயும் த.வைத்தமாநிதி, கம்பன் கழகம், பாளையங்கோட்டை

– நன்றி ச.சிவகாமி, இருபதில் கம்பன், மாதவி பதிப்பகம், சென்னை –14



# கம்பன் கழகம், வாழியூர்.
# வெள்ளிவிழா அழைப்பிதழ்

பேரன்புடையீர் வணக்கம்

நிகழும் திருவள்ளுவராண்டு 2035 தைத் திங்கள் 24, 25 ( 7 - 2 - 04, 08 - 02 - 04 ) சனி, ஞாயிறு ஆகிய நாள்களில் வாழியூர் கம்பன் கழகத்தின் வெள்ளிவிழா நடைபெற உள்ளது. முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமச் சீராளர் பங்கேற்றுச் சிறப்பிக்கின்றனர். அனைவரும் வருக

என்றும் மாறாத அன்புடன்
கம்பன் கழகத்தார், வாழியூர்.தி.மலை.மாவட்டம்

## நிகழ்ச்சித் தொகுப்பு

7 - 2 -2004 சனிக்கிழமை

| | |
|---|---|
| பிற்பகல் 3.00 மணி | : **கருத்தரங்கம்** |
| வரவேற்புரை | : திரு. இராச.கோவிந்தராசன் |
| முன்னிலை | : திரு. இரா.இராசா<br>ஒன்றிய கவுன்சிலர், வாழியூர் |
| தலைமை | : டாக்டர். **இரா.வ.கமலக்கண்ணன்,** வந்தவாசி கல்லூரி விரிவுரையாளர் (ஓய்வு) |
| தலைப்பு | : **கம்பனில்...** |
| வீரம் | : திரு. நா.நஞ்சுண்டன் |
| நகை | : திரு. க.மீ.வேங்கடேசன் |
| மனிதநேயம் | : திரு. மா.ஞா.சிவராஜ் |
| காதல் | : திரு. ஆ.குருசாமி |
| நன்றியுரை | : திரு. சி.குமரன் |
| பிற்பகல் 5.00 மணி | : பாராட்டு, விருது வழங்குதல், நூல் வெளியீடு |
| வரவேற்பு | : திரு. வாழி.அ.நடராசன் |
| முன்னிலை | : திரு. அ.சிவராமன் |
| தலைமை | : திரு.**வி.சி.தினகரன்**<br>வழக்கறிஞர், வாழியூர் |

தமிழுக்குச் சேவை செய்பவர்களைப் பாராட்டுபவர் : திரு. **வெ.சோலைநாதன்**
ஓட்டல் சோலை, வேலூர்

பாராட்டு பெறுவோர் : கவிஞர் வே.இரா. சிவஞானவள்ளல், வேலூர்
புலவர்.சா.தா. திருஞானம், தி.மலை
புலவர் வே.பதுமனார் குடியேற்றம்

கம்பன் பணிச் செல்வர் விருது வழங்குபவர் : திரு. **கோ.செல்வம்**
சென்னை வானொலி முன்னாள் இயக்குநர்

விருது பெறுவோர் : திரு. நா.நஞ்சுண்டன், கோவை
திரு. கா.மீ.வேங்கடேசன், கோவை

வாழியூர் கம்பன் கழகச் செயலாளர் வே.இராசவேலனின் 25- வது நூல்
**செங்கண்மால்** வெளியிட்டு சிறப்புரை :
பேராசிரியர் முனைவர். **தெ.ஞானசுந்தரம்,** சென்னை

முதலில் நூல் பெறுவோர் : திருமதி. திருச்செல்வி ஆறுமுகம்
திருமதி. சோதிலட்சுமி கருணாநிதி

ஏற்புரையும் நன்றியும் : நூலாசிரியர்

இரவு 7.30 மணி : **பட்டிமண்டபம்**
வரவேற்பு : திரு. தேவ. மாணிக்கவேலன்
முன்னிலை : திரு. கோ.பிச்சாண்டி
நடுவர் : புலவர். **வே.பதுமனார்**
பொருள் : **கம்பன் புகழ் பெரிதும் வெளிப்படுவது**

| **கருத்துச்செறிவாலே!** | **கற்பனை நயத்தாலே!** |
|---|---|
| திரு. சு.மோகன்குமார் | திரு. பொன்.செல்வகுமார் |
| திரு. ச.விநாயகம் | திரு. கோ.ஜெகதீசன் |
| திரு. செ.வரதராசன் | திரு. மு.சரவணன் |
| செல்வி.ச.இரேவதி | செல்வி.மோ.கனிமொழி |

நன்றியுரை : செல்வன் சிவா
கலைநிகழ்ச்சி அமைப்பு: திரு. கா.சுரேஷ், வாழியூர்

**8 - 2 - 2004 ஞாயிற்றுக்கிழமை**

| | | |
|---|---|---|
| முற்பகல் 10 மணி | : | கவிதைப் போட்டி |
| வரவேற்பு | : | திரு.கு.அன்பழகன் |
| நடுவர்கள் | : | திரு.வே.இரா. சிவஞானவள்ளல், வேலூர் |
| | | திரு. இரா. இராதாகிருஷ்ணன், ஆர்க்காடு |
| | | புலவர். அரு.சுந்தரேசன், வேலூர் |
| பங்குபெறுவோர் | : | கவிஞர் பலர் |
| நன்றி | : | புலவர். க.சிற்றரசு |
| பிற்பகல் 2.30 மணி | : | **தொடர் பட்டிமண்டபம்** |
| வரவேற்புரை | : | திரு. த. காண்டீபன் |
| முன்னிலை | : | திரு. மா.சானகிராமன், சு.தாங்கல் |
| நடுவர்கள் | : | மகா வித்வான் மயிலம் **வே.சிவசுப்பிரமணியன்** |
| | | திரு. **முத்து. இராமமூர்த்தி** |
| பொருள் | : | **காப்பிய வளர்ச்சிக்கு உறுதுணையானவர் யார்?** |
| விசுவாமித்திரர் | : | திரு. அ.கி.செல்வதுரை, காஞ்சி |
| மந்தரை | : | செல்வி. ஆ.வேணிஸ்ரீ, ஆர்க்காடு |
| சூர்ப்பனகை | : | செல்வி. ஆர்.மீனாட்சி, காஞ்சி |
| வாலி | : | புலவர். வை.இராசேந்திரன், காஞ்சி |
| வீடணன் | : | திரு.கே.டி.எஸ். மாணிக்கவேலு, காளசமுத்திரம் |
| நன்றி | : | திரு. நீ.இரவி |
| பிற்பகல் 5.30 மணி | : | **பரிசு வழங்குதல்** |
| வரவேற்பு | : | திரு. ந.எத்திராசு |
| தலைமை | : | திரு. **ஜி.நந்தகோபால்** |
| | | தலைமை ஆசிரியர், அ.மே.நி.பள்ளி, போளூர் |
| பரிசு வழங்குபவர் | : | திரு. **பா. இந்திரராசன்** |
| | | மாநிலசெயலாளர், எக்ஸ்னோரா இன்டர் நேஷ்னல் |
| நன்றி | : | திரு. சு.சரவணன் |
| பிற்பகல் 6.30 மணி | : | விருது வழங்குதல், மலர் வெளியீடு, வழக்காடு மன்றம் |
| வரவேற்பு | : | திரு. த.நெடுஞ்செழியன் |
| முன்னிலை | : | திரு. எல். வரதன் மு.இராணுவம், 5- புத்தூர் |

தலைமை : திரு. **த.செயகுமார்**
துணை மேலாளர், பாரத ஸ்டேட் வங்கி, க.மங்கலம்

விருது வழங்குதலும் வெள்ளி விழா மலர் வெளியிடுதலும்

திருமிகு. **தமிழ்க்குடிமகன்**
முன்னாள் அமைச்சர்.

**இலக்கிய காவலர்** விருது

பெறுவோர் : தமிழ்த்திருவாளர்கள்
டாக்டர் த.குமரகுரு, வேலூர்
இரா. ஈசுவரப்பன், ஆர்க்காடு
மா.சோதி, ஆர்க்காடு
வி.எஸ். இரமேஷ்குமார், வேலூர்
க.இராசு, வேலூர்
ஆர்.சுப்புராயன், புதுப்பாளையம்
வெ.கிருஷ்ணமூர்த்தி, மேல்பள்ளிப்பட்டு
ந.சங்கரநாராயணன், வேலூர்
கு.சரவணன், கண்ணமங்கலம்.

வெள்ளி விழா மலர் : திரு. **இரா.மோகன்,**
துணை தாளாளர், சு.சா.மே.நி.பள்ளி, ஆரணி

பெறுவோர் : படைக்களப் பாவலர். **துரை.மூர்த்தி,**
தலைவர் ஆர்க்காடு கவிஞர் மன்றம்

ஏற்புரை : வாழியூர். வே.இராசவேலன்

**வழக்காடு மன்றம்** :

நடுவர் : இலக்கியச் சுடர் திருச்சி. **இரா. இராமமூர்த்தி**

வழக்கு : கம்பனுடைய கருத்துகள் இக்காலத்திற்கு ஏற்புடையன என்பது குற்றம்

தொடுப்பவர் : திரு. அ.கி.செல்வதுரை

மறுப்பவர் : செல்வி. ஆர்.மீனாட்சி

நன்றியுரை : திரு. ஆ.சங்கர் திருப்பத்தூர்

மாணவர்களுக்கு பரிசு புத்தகங்கள் அன்பளிப்பு :
**பாரத ஸ்டேட் பாங்கு, கண்ணமங்கலம்.**

விழாவில் இலக்கிய நூல்கள் விற்பனை செய்யப்படும்.

நூல்களை வாங்குங்கள், எழுத்தாளர்களுக்கு ஊக்கம் தாருங்கள்

ஒளி ஒலி அமைப்பு : கனகா சவுண்ட் சர்வீஸ், சின்னபுத்தூர்